*Annamalai University Tamil Series*

# கோசர்

(ஓர் ஆராய்ச்சி)

பாஷா கவிசேகர மகாவித்வான்

ரா. இராகவையங்கார்

எழுதியது



அண்ணாமலை நகர்

1951

# முன்னுரை

---

கொங்கிளங்கோசர் என்றும், நான்மொழிக் கோசர் என்றும், வாய்மொழிக் கோசர் என்றும், துணைதேர்க் கோசர் என்றும் பண்டைத் தமிழ்த் தொகை நூல்களிற் காணப்படும் பெயர்கள் யாரைக் குறித்து நிற்பன, அவர்கள் எங்கிருந்து தென்றமிழ் நாட்டுப் போந்தனர் என அறிஞர் பலர் ஆராய்ந்து இதுகாறும் ஓர் முடிவிற்கு வரவில்லை. இதனைப் பலபட ஆய்ந்து காலஞ்சென்ற பாஷாகவிசேகரர் மகாவித்வான் ரா. இராகவையங்கார் அவர்கள் எழுதியுள்ளார். இப்பெரியார் 1935 முதல் 1940 வரையில் இப் பல்கலைக் கழகத்துத் தமிழ் ஆராய்ச்சிப் பகுதித் தலைவராக இருந்தார். அக்காலை அவருடனிருந்து பணியாற்றும் பேறு எனக்கு வாய்த்திருந்தது. இக்கட்டுரை அப்பொழுது அவரால் எழுதப்பட்டதாகும். இதன்கண் ஆசிரியர் கோசர் முதலிற் கொங்கில் வதிந்தவர் என்றும், பின்னர் குடகடற் புறத்து மலை நாட்டிற் குடியேறினர் என்றும், நான்மொழி நாடு என்ற தொடர், தமிழ், தெலுங்கு, மலையாளம், கன்னடம் என்ற திராவிட மொழிகள் நான்கும் ஒருங்கே வழங்கப்பெற்ற சேலம் ஜில்லா நாமக்கற் சீமையையே சுட்டும் என்றும், அவர்கள் தொன்றுதொட்டு வந்த தமிழ்க் குடிமக்கள் அல்லர் என்றும், வத்ஸம் என்னும் வட சொல்லுக்கு இளமை எனப் பொருளுண்டாகலின் வத்ஸ கோசரே இளங்கோசர் என வழங்கியிருத்தல் கூடும் என்றும், எஞ்ஞான்றும் ஒருபடித்தாக ஒருவற்கிளமை யெய்தாதாகலின், இளங்கோசர் என்னும் பெயர் இளமைப் பருவம் குறித்து வந்த பெயர் அன்றென்றும், கோசம் என்ற ஓர் அரிய சூள் முறையைக் கையாண்டதனால் அவர்கள் கோசர் எனப்பட்டனர் என

றும் அவர்கள் வன்கட் சூழ்ச்சியில் வல்லுநர் என்றும், 'தொலைமூதாலத்துப் பொதியில்' என்ற குறுந்தொகையிற் காணப்படும் 'பொதியில்' மதிமிகு குறுமுனி வதிந்த பொதியில் அன்றென்றும், அது மோகூரை யடுத்துள்ள ஆலமுற்றமே யாகும் என்றும், கோசர் காஷ்மீர நாட்டிலிருந்து வெளிவர அடுத்துத் தமிழ் நாடு போந்தவர் என்றும், வடபமோரியர் சேனைக்கு முன்னணியாகச் சென்று மோகூர் மன்னனை எதிர்த்தவர் அன்றென்றும், அதற்கு மாறாக மோகூர் மன்னர்க்கு உற்ற துணையாக மோரியரை எதிர்த்த பெருவீரர் என்றும், வெளியர்க்கும் கோசர்க்கும் நீடித்த பகைமை உண்டென்றும், அகுதை, திதியன் குறும்பியன், ஆதனெழினி, தழும்பன் முதலிய வீரர்கள் கோசர் மரபினரென்றும், கோசர் புத்தூரே கோயம்புத்தூர் என்று திரிந்தது என்றும் பல இலக்கிய ஆதாரங்களையும் சாசன ஆதாரங்களையும் காட்டித் திறம்பட எழுதியுள்ளார். நுண்மாண்நுழைபுலமிக்க இப்பேரறிஞர் ஆராய்ச்சியிற் காணப்படும் கருத்துக்கள் யாவும் புதிய கருத்துக்கள். காய்தல் உவத்தல் அகற்றி ஆராயும் பண்புடையாளர்கள், இதனைக் கண்டு ஆராய்ந்து உண்மை தெளிவார்களாக.

இ. சே. வரதராஜய்யர்

---

# கோசர்

***சிலப்பதிகார அரும் பதவுரைகாரர்,***

> **"கொங்கிளங் கோசர் தங்கணாட் டகத்து**
> **நங்கைக்கு விழவொடு சாந்தி செய்ய**
> **மழைதொழி லென்று மாறாதாயிற்று"**
>
> **(சிலப் உரைபெறு கட்டுரை)**

என்புழிக் கோசரைக் "குறும்பு செலுத்துவார் சில வீரர்" எனவுரைத்தார் அடியார்க்கு நல்லார் ஆண்டுக் "கொங்கு மண்டிலத்து "**இளங்கோவாகிய கோசர்**" என்று கருதி மொழிந்தனர் அரும் பதவுரைகாரர் குறும்பு செலுத்துவார் என்றது, சிறிய அரண்களில் ஆட்சி செலுத்துவார் என்றவாறும் அடியார்க்கு நல்லார் கொங்கு மண்டிலத்து **இளங்கோவாகிய கோசர்** என்றது, வேந்தர் வழியினராய்க் கொங்கில் வதிகின்ற கோசரைக் குறித்ததாகும் இவர் இங்ஙனங் கருதியது மேல் வரந்தருகாதையில் இவரைக் "குடக்கக் கொங்கர்" எனக் கூறியதுபற்றி யென்று துணியலாம் குடக்கக் கொங்கர் என்றவரைக் குடமலை நாட்டாராயிருந்து கொங்கிற் குடியேறி வதிகின்ற இளங்கோ வழியின ராகிய கோசர் என இவர் கருதினராவர். இவர் கோசரை இளங்கோவாகிய கோசர் என்றது இவரைப் பற்றிச் சான்றோர் கூறிய பலவிடங்களிலும் **இளங்கோசர்** என வருதல் பற்றியென்றுய்த்துணரலாகும் இத னுண்மை மேலாராயப்படுவதனால் நன்கு வெளியாகும். வரந்தருகாதையுள் ஆரிய மன்னர் முதலாகக் கயவாகு வேந்தனிறுதியாகக் கூறிய அரசர்களுக்கிடையே "குடக்கக் கொங்கர்" என இவரைக் கூறுதலான், இவரையும் அவர் அரசராகக் கருதியே இளங்கோவாகிய கோசராக வுரைத்தனரெனத் தெளியலாம் கோசரை இளங்கோ வாகிய கோசர் என வழங்கியதில் ஓருண்மை யுள்ளதாகவே வேண்டும். செங்குட்டுவன் கண்ணகிக்குக் கொங்கிற

கோயில் எடுப்பித்தது அடியார்க்கு நல்லார்க்கு உடன்பாடின்மையால், குடக்கொங்கர் என்பார் குடகப் புறத்து நின்று கொங்கிற் றங்கியுள்ளார் என்று இவர் கருதினார் ஆவர். இக்கருத்துக் கொங்கிளங் கோசர் என்னுந் தொடர்க்கு அவர் கூறிய வுரையான் உய்த்துணரப்படுவது. குடக்கொங்கர் என்பது கொங்கினின்று குடகடற் புறத்துக் குடியேறினாரை நன்கு குறிக்குமென்றுணர்க. கொங்கிற் குடகர் என்றால் அடியார்க்கு நல்லார் கருத்து நன்கு பொருந்தும். அங்ஙனமல்லாது குடக்கொங்கர் என்றலால் குடகப் புறத்தும் கொங்கர் என்ற பெயரையே யுடையார் என்று தெளிய நிற்றல் காண்க. ஆஅய் என்னும் வேளிர் வேந்தன் கொங்கரைக் குட கடல் லோட்டிய செய்தி,

"கொங்கர்க் குடகட லோட்டிய ஞான்றை"

(பு.நா, 130)

என்பதனால் அறியப்படுதலால் இதனுண்மை எளிதினுணரலாம். செங்குட்டுவன் கொங்கிற் கோயில் எடுத்தது கண்டு, கொங்கராயக் குடகிலுள்ளாராகிய கோசரும், தாங்கள் தங்கியுள்ள குடமலை நாடுகளிலே கண்ணகிக்கு விழவுஞ் சாந்தியுஞ் செய்ய விழைந்தனர் என்பதே இயைபுடைத்தா மெனக. இதுவே அரும் பதவுரைகாரர் கருத்தென்பது, அவர் சிலப்பதிகார வேட்டுவவரியில் "**கொங்கச் செல்வி குடமலை யாட்டி**" எனவருமிடத்து "மேற்பட்டு இவளைத் தெய்வமாகக் கொண்டாடுமிடம் கூறினபடியாலே இவள் துர்க்கையாகவே பிறந்தனள் என்றவாறு." என விளக்கிய வாற்றானுணரலாகும். இவருரையாற் கண்ணகியைத் தெய்வமாகக் கொண்டாடிய இடம் கொங்கு குடமலையு மாதல் எளிதிலறியலாம். இவர் கருத்துப்படி நோக்கிற் கொங்கிளங் கோசர் என்பாரைக் குடக்கொங்கர் எனவரந்தரு காதையில் விளக்கியதனால், கொங்கினின்று குடகப் புறத்துக் குடியேறிய இளங் கோசரென்பதே திரண்ட பொருளாகுமென்ப. இதனாற் கொங்கிளங் கோசர் தங்கணாட்டகமென்பது இளங் கோசர் கொங்கினின்று போய்த் தங்

கிய குடமலை நாட்டகம என்ற வாறும். இவற்றாற் கோசர் முதலிற் கொங்கில் வதிந்தவரென்றும், பின்னர்க் குடகடற் பக்கத்து மலை நாட்டிற் குடியேறியவ ரென்றும் துணியப் படுதல் காண்க. மதுரைக் காஞ்சியில் இவரை "நான் மொழிக் கோசர் தோன்றியாங்கு" என்றார். இவ்விடத்து நச்சினார்க்கினியர் "நான்கு வகையாகிய கோசர் வஞ்சின மொழியாலே விளங்கின்ற போன்று" என வுரைத்தார் இங்ஙன் நாற் கோசர் மொழித் தோன்றி யாங்கு எனச் சிந்தித்துக் கூட்டாது நான் மொழி நாட்டுக் கோசர் தோன்றின்ற போன்று எனக் கிடந்தபடியே பொருள் கொள்ளலா மெனக் முற் காலத்து நான் மொழி நாடென ஒன்றுண் டென்பது சாசன ஆராய்ச்சியாளர் கண்டது இதனைத் திருவறைக் கலலும், நான் மொழி நாடும உடைய வத்தராயனை விடு காதன்" (Topographical List of South Indian Inscriptions No 213 - 11 of 1906) என்பதனான் அறியலாம. இதன்கட் கூறப்பட்ட திரு வறைக்கல் இக் காலத்து நாமக் கல் என வழங்குவதென்று துணியப்படுவது. இதன் கட்கூறிய நான்மொழி நாடு திருவறைக் கல்லுக்குப் பக் கத்ததா மென்பது பொருந்தும்

ஈண்டு நான மொழிகளாவன தமிழ தெலுங்கு கன் னடம மலையாளம என்பனவாகும இந் நான மொழியும வழங்குதற்குரிய எல்லையில இந்நாமக்கற்புறம இருத்தல பற்றி இப்பெயரெய்தியதென்று தெளியலாம இந் நான் மொழி நாடு மழகொங்கின் வடக்கணுள்ளதலை ஈண்டு முன வதிந்து பின் குடகிற் குடியேறிய கோசர் "கொங் கிளங் கோசர், குடக்க கொங்கர்" எனப் பட்டாரென்று கொள்ளத்தகும்.

இனி இங்ஙன மன்றி மாமூலனார் அகப்பாட்டில (15) " மெய்ம்மலி பெருமபூட் செம்மற கோசா

---

தோகைக் காவிற் றுளுநாட்டன்ன "

எனக் கூறுதலாற் கோசர் ஆதியிலே துளுநாட்டின் வதிந்தவர் தாமென்றும், பின்னர்க் கொங்கின் வதிதலாற் கொங்கிளங் கோசர் குடக்கக் கொங்கர் என வழங்கப் பட்டன ரென்றும் கூறுவாருமுண்டு. எங்ஙனமாயினும் கொங்கிளங் கோசர், கோசர் துளுநாடு என்பவற்றால் இவர் ஆதியில் வதிந்த இடங்கள் கொங்கு நாடும், துளுநாடும் எனக் கொள்ளல் பொருந்தும். இக் கோசர் கண்ணகிக்கு விழவுஞ் சாந்தியுஞ் செய்தல் கேட்கப்பட்ட வாற்றால், இவர் சேர வேந்தன் செங்குட்டுவனை யொத்து வேத வழக்கொடுபட்டவரல்லது பிறராகா ரென்று துணியலாம். இவரும் பிறரும் இலங்கைக் கயவாகு வேந்தனும்,

"இமய வரம்பனின் னன்னுடை செய்த நாளணி வேள்வியில், வந்தீகென்றே வணங்கினர் வேண்ட"

(சிலப். வரந்தரு. 161-163)

லான் இவ் வுண்மை யுணர்க. கோசர் புரிந்த விழவுஞ் சாந்தியும் வைதீகமேயா மென்று கொள்க.

இவ்வாறு வேத வழக்கொடுபட்டுக் கோசர் என்ற பெயரிற் சிறந்த இவ் வீரருடைய அரிய செய்திகள் பல செந்தமிழ்ச் சான்றோர் தொகை நூல்களிலாங்காங்குக் கேட்கப் படுவன வேனும், இவர் பண்டு தொட்டுள்ள தமிழ்க் குடி மக்களெனத் துணிதற் கில்லை. கோசர் துளுநாடு என்றதனாலும் (அகம் 15) "நான்மொழிக் கோசர்" (மதுரைக் காஞ்சி) என்றதனாலும், இவரைத் தமிழரென ஒரு தலையாகத் தெளிதலரிதாதல் காண்க. இவரைப் பாடிய பல்லிடத்தும் நல்லிசைப் புலவர்,

"இருப்பிடம் படுத்த வடுவுடை முகத்தர்
கருங்கட் கோசர்" (அகம். 90) எனவும்
"துனைகாலன்ன புனைதேர்க் கோசர்" (அகம். 251) எனவும்
"வளங்கெழு கோசர் விளங்குபடை" (அகம். 205) எனவும்
"வெள்வேல், விளம்பல் கோசர் விளங்குபடை கன்மார்
இகலின ரெறிந்த வகலிலை முருக்கின்
பெருமரக் கம்பம் போல" (புறம். 169) எனவும்
"வலம்புரி கோசரவைக் களத்தானும்" (புறம்.283) எனவும்

கூறுதலான் இவர் வேற்படையான் வென்றி யெய்திய பெருந் தோள் வீரரென்று தெரியலாவது. "இரும்பிடம் படுத்த" என்புழிப் பழைய வுரைகாரர் இரும்பினை வேலென்றே கொண்டார். வலம்புரி கோசரவைக் களம் என்றதனுலிவர் தந்தம் படை வென்றியைக் காட்டவல்ல போரவைக் களம் வைத்துப் போற்றினரெனத் தெரியலாம். இவர் நன்றல்லாக் காலத்தும் தம்முடைய நட்பிற் கோடாதவரென்பதும், நெடுங்காலஞ் சென்றேனும் கருதியது முடிக்கும் பெரிய சூழ்ச்சியை யுடையவரென்பதும், தமக்கே சிறப்பாக வாய்மையை விடாது போற்றிப் புகழ் படைப்பவரென்பதும், தம்மகத்துப் புக்க வறியாரை நன்று தாங்கும் பேரளியுடையவரென்பதும் பிறவுஞ் சான்றோர் பாடல்களானறியக் கிடப்பனவாகும்.

"நன்றல காலையு நட்பிற் கோடார்
சென்று வழிப்படூஉந் திரிபில் சூழ்ச்சியிற்
. ...கோசர் (அகம். 113) எனவும்
"ஒன்று மொழிக் கோசர்" (அகம் 196) எனவும்
"வாய்மொழி நிலைஇய சேணவிளங்கு நல்லிசை
வளங்கெழு கோசர்" (அகம் 205) எனவும்
"கோசர் நன்மொழிபோல வாயாகின்றே" (குறுந் 15)
எனவும்
"மெய்ம்மலி பெரும் பூட் செம்மற் கோசர்" (அகம். 15)
எனவும்
"கோசர் துளுநாட்டன்ன
வறுங்கை வம்பலர்த் தாங்கும் பண்பின" (அகம். 15)

எனவும் வருவனவற்றான் நன்கறிக. இவர் வீரத்திற் கேற்ற மாறாப் பெருவாய்மையும் அவை யிரண்டிற்கு மேற்ப உற்றுழியுதவும் பெருவண்மையும் உடையரென்றும் இங்குக் காட்டிய மேற்கோள்களால் நன்கறியலாகும். இவற்றுடன், சென்று வழிப்படூஉந் திரிபில் சூழ்ச்சி யுடையரென்று சான்றோர் புகழ்தல் நினைந்து கொள்க. வறுங்கை வம்பலரையுங் கொன்று மகிழும் பாலை நில மாக்கள் போலாது அவரைத் தாங்கும் பண்பினரென்று

இவர் தனியே புலவராற் சிறப்பித்துப் பாடப் படுதலான் இவர் கொடை மேம்பாடு நன்குணரப்படும்.

> "நெறிசெல் வம்பலர்க்கொன்ற தெவ்வர்" (அகம். 113)
> என்றும்
>
> "அம்பு தொடை யமைதி காண்மார் வம்பலர்
> கலனில ராயினுங் கொன்று புள்ளூட்டும்
> கல்லா விளையர் கலித்த கவலை" (அகம். 375) என்றும்
> "வம்பலர்ச் செகுத்த அருஞ்சுர கவலை" (அகம். 161)
> எனவும்

வருமிடங்களிற் பாலை நில மாக்கள் இயல்பு காண்க.

மேல் எடுத்துக் காட்டிய கோசர் மேற்கோள்களால் இக் கோசர் நாகரீகத்திற் சிறந்த சத்திய வீரரென்பது நன்கு புலனாகும். இச் சத்திய வீரர் கோசர் எனப் பெயர் சிறந்த தன் காரணம் பலபடியாக ஆலோசிக்கப் படுவது. கோசம் என்பது பெருங்கதைத் தலைவனான வத்தவர் கோன் உதயணன் இருந்தரசாண்ட கோசாம்பிக்கு வழங்கும் பெயராகும். இது கங்கையும் யமுனையுங் கலக்குமிடத்துள்ள பிரயாகைக்குச் சிறிது தூரத்து யமுனைக் கரையிலிருந்த தென்பர். இப்போது கோசம் என்ற பெயரிலுள்ள சிற்றூர் இப்பெரு நகரிருந்த தல மாகுமென்பர் (கன்னிங்ஹாம் பூகோளம் பார்க்க) கோசாம்பி நகரம் வான்மீகத்துங் கூறப் பட்டுள்ளது.

> பத்தநம் கோசகாராணம
> . மாரக்கயத பிஸத்தஸத்த
> ராமஸய தயிதாம பாரயாம
> ஸீதாயாம தசரதஸ நுஷாம

இதனை யிந்நகரின் பழைமை யறியலாம். இதனை யடுத்துத் தமிழ்ப் பாடல்களில் ஒரு சில வத்தவர் கோனைப் பற்றி வருவன கேட்கப் படுதலான், வத்ஸ நாட்டுக் கோசத்தினின்று இத் தென்னாடு புகுஞ் சீருஞ் சிறப்பும் பெற வாழ்ந்த வீரர் பலருண்டென்றுய்த் துணரப்படுவது. தம வத்ஸநாடு பஞ்சம் பட்டும் பூகம்ப மெய்தியும் தடுமாறிய காலத்து, இவர் இத் தென்னாடு புகுவதிந்தவ

ரென்று கொள்ளலாம். தென்னாட்டில் வாழ்ந்தவர் மரபில் வந்தவர் தலைவனைப் பற்றிய நூல் **"வச்சத் தொள்ளாயிரம்"** என்று பெயர் பெறும். வச்சம் என்பது வத்ஸ தேசமாகும். நூற் பாட்டை வீர சோழிய வுரை காரர் பெருந்தேவனார், தொகை மொழிக்கு உதாரண மாகக் காட்டி விளக்கிக் கூறியவாற்றான் இவ்வுண்மை அறியப் படுவது அவர்,

> **"வேட்டொழிவ தல்லால் வினைஞர் வினைவயலுட்**
> **டோட்ட கடைஞர் சுடுதந்து—மோட்டாமை**
> **வன்புறத்து மீதுடைக்கும் வச்சத் திளங்கோவை**
> **இன்புறுத்த வல்லமோ யாம்"** (வீரசோ. அலங். 11. மேற்)

இதனுட் சிறப்புடையளாகிய தலை மகளை இகழ்ந்து தலைமகன் சிறப்பில்லாத பரத்தையர் மாட்டு நிகழா நின்றமையின், நாட்டுக் கடைஞருள்ளார் சிறப்பில்லாத நந்தை ஊன்றுப் புடைய யாமையின் புறத்து உடைத் துத் தின்பர் என்னும் பிறனுல் தொகுத்து விளங்கச் சொன்னமையாற் றொகை மொழியாயிற்று, "வச்சத் தொள்ளாயிர முழுதும் தொகை மொழி யெனக் கொள்க" என வச்சத் தொள்ளாயிரப் பாட்டை எடுத் துக் காட்டி விளக்கியவாற்றான் இஃதுணரலாம்.

> **வாடை குளிர மருந்தறிவா ரில்லையோ**
> **கூட லினியொருகாற் கூடாதோ—ஓடை**
> **மதவார ணத்துதயன் வத்தவர்கோ னூட்டிற்**
> **கதவா தோதமியேன் கண்"** (பெருங் புகவுரை. பக். 9).

என்ற பழம் பாட்டும் இவ்வச்சத் தொள்ளாயிரமே யாகும். இவற்றான் முன்னமே கோசம் என்னும் ஊரில் அரசாண்ட வத்ஸ தேயத்தர் வழியினர் இத் தென்னாடு புகுந்து வாழ்ந்து வழங்கிச் சான்றோர் பாடல் பெற்றது நன்கு துணியலாம். இவ்வச்சத் தொள்ளாயிரப் பாட் டில் 'வச்சத்திளங் கோவை' எனப் பாடியதனால், இந் நாட்டுக் குடியேறியவன் வச்சத்திளங் கோவேந்தன் வழி யினன் என்று தெளியலாகும். இவன் கோசத்தினின்று இங்கு வந்தவன் வழியினனாதலால் இவன் வழிக் கோச

ரெல்லாம் இளங் கோசர் என்று வழங்கப் பட்டனரென உய்த்துணரலாம். இதனாலேதான் அடியார்க்கு நல்லார், கொங்கு மண்டிலத்து இளங் கோவாகிய கோசர் என உரை கூறினாரென்று துணியலாம். இதனாற் கோசர் தமிழ் மூவேந்தர் இளங் கோவழியினரென நினைத்தற்காகாமை யுணர்க. அங்ஙன நினைத்தற்கு மேற்கோளில்லாமையும் நோக்கிக் கொள்க.

இனி இக் கோசம்பியை ஆண்ட அரசரே **இளன்** என்னும் திங்கட் குலத்து வேந்தன் வழியினரென்றும், அது பற்றியே அவன் வழிவேந்தர் இளங்கோ எனப் பெயர் சிறப்பரென்றும், இவர் வட நாட்டில் ஐலர் எனவும் அயிரர் எனவும் பெயர் சிறந்தனர் என்றும், இவருள் ஒருவன்தான் **காரவேலர்** என்னுங் கலிங்க வேந்தனென்றும் கருதுவாருண்டு. காரவேலர் வேந்தன் அத்திகும்பாச்சாசனத்திற்றன்னைச் சேதியர் வழியினன் என்று வெளியிடுதலால், இவன் கோசம்பியை ஆண்ட உதயணனுடைய தாயின் மரபைச் சேர்ந்தவனாதல் தெளிவாகும். உதயணன் மாதுலனாட்டையும் தந்தை நாட்டையும் ஒருங்கு ஆண்டவனென்பது பெருங்கதையான் அறியப்பட்டது.

இனி இவர் வத்ஸ தேசத்துக் கோசம் என்ற தலை நகரினின்று வந்தவராதலான் இளங்கோசர் என வழங்கப் பட்டனரெனின் அதுவும் நன்கு பொருந்தும். வத்ஸ மொழி ஆரியத்தில் இளமைக்குப் பெயராதலான் **வத்ஸ கோசர்**—இளங் கோசர் என மொழி பெயர்த்துத் தமிழரால் வழங்கப்பட்டனரென்றுங் கொள்ளலாம். கோசரைக் கூறிய பல விடத்தும் சான்றோரெல்லாம் பல்லிளங் கோசர், நல்லிளங் கோசர், கொங்கிளங் கோசர் என வழங்கிக் காட்டலான் இஃது உடலிளமை பற்றியதாகாதென்பது ஒரு தலையாகத் துணியலாம். வத்ஸ தேசத்தை இளநாடெனக் கொண்டு அந் நாட்டு வேந்தனை இளங் கோவென்றும், அந் நாட்டுக் கோசரை இளங் கோசரென்றும் வழங்கினரென்பது பொருந்தியதாகும். அடியார்க்கு நல்லார் கொங்கு மண்டிலத்து

இளங் கோவாகிய கோசரும என்றது கொங்கு மண்டிலத்துள்ள வத்ஸ வேந்தாகிய கோசரும எனனுங கருததா லெனறுயத்துணரலாகும

மஹா மஹோபாத்யாய கஙகா நாத்ஜா எனனும பெரியாா (கர்பஙகா மநதிரியாா) கோசத்தை யடுத்துள்ள பிரயாகையை, "இளவாஸ எனறு பழையோர் கூறுவர்" எனறு சொல்வா. இஙஙனங கொளளாது கோசர் எப்போதும இளமையோடே யிருப்பரெனறு துணிவது பொருநதாதாம. "ஊர்முது கோசா" (அகம 262) என வழஙகலானா, இவா எலலா மககளும போனறு யாககை மூத்துககழிதலுணடெனக இதனால இவரை இளங் கோசா எனப் பலவிடததும வழஙகுவது இவர் குடி பற்றியது அலலது நாடு பற்றிய தெனின நன்கு பொருநது மெனக இளன வழியிற் குருகுல முண்டாதலும அக குரு குலதது உதயணனா பிறததலுங கண்டு, இவ் வுண்மை துணியலாம "குரு குலத்தரசன சாயாச செங கோற சதானிகன" மகன உதயணனுதல நோககிக கொளக இவ் வுதயணனுககுப் பினனே இவன குலத் தவா பலர் வத்ஸ நாட்டுக் கோசததினின்று முதலிற் கொஙகிற குடியேறி யிருநதது, "கொஙகு மண்டிலத்துட் பல பாகஙகளில் வதசவன, வத்சராயன, வசசராயன் எனனும பெயாகள இக காலத்து வழஙகப் படுவன" என்று மஹா மஹோபாத்யாய Dr உ. வே. சாமி நாதையாவர்கள பெருஙகதை முகவுரையிற கூறுதலானும வலியுறுதல் காண்க. கொஙகு வேளிர் உதயணன பெருங கதையைத் தமிழிற் பாடுதறகும, இக கொஙகிற் குடியேறிய கோசர் மரபிற் பெருவளள லொருவன் காரணமெனின் அதுவும நனகு பொருநது மென்க. உதயணன் தாயின குலமான ஏயா குலமும இந நாட்டுக குடியேறி யிருநதது 63 நாயனமாருள ஏயர்கோன கலிககாம நாயனுர் எனனும பெயரானன கறியலாகும. இதனால உதயணன தாய மரபினரும இஙகு வந்து வதிதல் காணப்படும. கோசம ஆண்ட உதயணன்,

புத்தர் அவதரித்த நாளில் பிறந்தவன் என்று கூறுதலான இவன பழமை நன்குணரலாகும். இவனை மத்ஸ்ய புராணமுங் கூறும்.

இனி இக் கோசரைப் பற்றி நல்லிசைப் புலவர்கள் கூறிய சிறப்பியல்புகள் பலவும் கோசாம்பியை ஆண்ட உதயணன் நண்பினர்க்குப் பெரிது மொத்து விளங்குதல் அவர் கதை நோக்கி யறிக "நன்றல காலையு நட்பிற் கோடார் (அகம் 113)" என்ற இக் கோசர் பெரும்பண்பு உதயணன் சிறைப் பட்டிருந்த போது அவன் நண்பனாகிய யூகி (யௌகந்தராயணன்) அவனை விடுவிக்கப் பட்ட பாட்டானறியலாகும். இக் கோசர்க்குச் சிறந்த "சென்று வழிபடு உந்திரியில் சூழ்ச்சி" யென்பது யூகி முதலியோர் உதயணன் பகை வெல்ல வேண்டிப் புரிந்த அரிய பெரிய சூழ்ச்சிகள் பலவற்றாலும் நன்கறிந்ததாகும். பிறவும் இவ்வாறே ஓட்டியறிக.

இனி இக் கோசர் கொங்கு மண்டிலத்தே யல்லாமல் மேற்கடற் புறத்துத் துளுநாட்டினும் கீழ்க்கடற் புறத்து யமம் என்னும் ஊரினும் சோழர் உறையூரினும் வதிந்தனரென்பது பழம் பாடல்களா னறியலாவது. "கோசர் துளுநாட்டன்ன" (அகம் 15) என்பதனால் இவர் துளுநாட்டுமிக்கிருந்தமை நன்கறியப் பட்டதாம். கொங்கிளங் கோசர் என்றதனால் இவர் கொங்கில் வதிந்தமை புலனாயிற்று.

"செல்லூர்க் குணாது பெருங்கடல் முழக்கிற்றாகி யாணர் இரும்பிடம் படுத்த வடுவுடை முகத்தர் கடுங்கட் கோசர் நியம மாயினும"

(அகம். 90)

என வருதலான், இவர் கீழ்கடற் பக்கத்துச் செல்லூர்க்குக் கிழக்கே நியமம் என்னும் ஊரில் வாழ்ந்தது புலனாகும். செல்லூர்க் குணாது பெருங்கடல் என்றதனால் நியமம் என்னும் ஊர் கீழ்கடலை யடுத்துள்ள துணரப்படும். இங்குக் கூறியபடியே சோணாட்டிற் செல்லூரும் அதன் கீழ்த் திசையில் நியமம் என்னும் ஊரும்

இருப்பது கண்டு கொள்க. சோணாட்டு இவர் வலிபெற்று வீறுதலைக் கண்டு பொருது கிள்ளிவளவன் இவர் படையைச் சிதற அடித்தனன் என்பது,

"வாய்மொழி நிலைஇய சேணவிளங்கு நல்லிசை
வளங்கெழு கோசர் விளங்குபடை நூறி
நிலங்கொள வெ கிய பொலம்பூட் கிள்ளி"

(அகம். 205)

என வருதலான் அறியப் படுவது காண்க. சங்க காலத்து இச் செல்லூர்ப்புறம் கோசரால் பெருஞ் சிறப்புப் பெற்று விளங்கிய தென்பது "செல்லூரக் குணாஅது கோசர் நியமம் ஆயினும் கொள்குநரல்லர்" (அகம். 90) எனக் கூறியதனாலாயதது உணரலாகும். இவ்வூரிற் சிறந்த நல்லிசைப் புலவரும் உண்டென்பது "செல்லூரக் கோசனார்" (அகம் 66) என்பதனா னறியலாம். இக் கோசரிற் பலர் பெருந் தமிழறிஞராய்ச் சான்றோரால் நன்கு மதிக்கப் படுதல் 'கருவூரக் கோசனார்' (நற்றிணை 214) என்னும் பெயரானறியலாம.

"பல்லார்க்கு மீயும் பரிசிற் கொடைத் தடக்கை
மல்லார் மணிவரைத்தோள் வண் கோசன்—மல்லல் லந்தார்
செஞ் சொற் செருந்தைதன் றென்னுற்றந்தை யொரு
[ளும்
வஞ்சிக் கொடிமருங்குல் வந்து"

(யாப்பருங்கல விருத்தி ஒழிபியல்)

என்னும் பழம் பாட்டான், இவரிற் கொடையானும் வீரத்தானும் இன் சொலானும் சிறந்த செருந்தை என்பான் சோழர் உறையூரில் வாழ்ந்தது புலனாதல் காண்க.

இனிப் பிற்காலப் பாடல்களில் (வச்சத் தொள்ளாயிரம்) இவர் வத்தவர் (வத்ஸ தேசத்தார்) என வழங்கப் பட்டா ராயினும், சங்கத் தொகை நூல்களில் இவர் கோசர் என்றே பாடப்படுதலான் இவர் கோசத்தை (கோசாம்பியை)த் தலை நகராகக் கொண்ட வத்த நாட்டிற் புகுதற்கு முன்னே கோசர் என்ற பெயருடன் இருந்தவர் தாமென்று துணிவதும் பொருந்தும். அங்ஙனமாயின் இப் பெயர்க் காரணம் வேறே ஆராயப்

படும் காசமீர தேச சரித்திரமாகிய இராச தரங்கிணி யில் நட்பிற் பிழையாமைக்கு அந் நாட்டு மக்கள் கோசம் என்ற ஓர் சூள் முறை (சபத காமம்) மேற் கொண் டொழுகியது கேட்கப்படுவது, இவ்வுண்மையை

"இழிசின ஞகிய காசன அரசனுடைய
ஜுர நடுக்கம் போக்க உதிரத்தால் நனைந்த
தோலில் இன்று கோச முறையில் ஆணை
யிட்டனன்" (8 ஆந்தரங்கம் 3006) எனவும்
"இராசத் துரோகிகள் தம்முட் கோச
முறையைச் செய்து அரசனுயிரைக்
கவர வுடன் பட்டனர்" (8 280) எனவும்,
"சோமபாலன் கோச முறையில் ஆணை
யிட்டும் அரசன் படை யெடுப்பைக்
கவனியா திருந்தான்" (8 2222)
"அரசனுந் தாமரனும் வாளோடு
உதிர நனைந்த தோலினின்று கோச முறை
யிலாணை யிட்டனர்" (ஷை 5 326)

எனவும் வருதலான் நன்குணரப் படுவது. இஃது அந் நாட்டுத் தொன்று தொட்ட வழக்கமாகும். இவ் வாறு நட்பிற் பிழையாத பெருவாய்மைக்குக் கோச முறையை மேற்கொள்பவராதலின் இவர் கோசர் எனப் பட்டாரெனின், இத் தென்னாட்டுக் கோசரியல்பிற்கு அது நன்கு பொருந்துமெனக். இக் கோச முறை தனி யேயும் வஞ்சினங் கூறி மேற் கொள்ளும் இடத்தும் உண்டென்பது ஷை 7 746 ஆம் சுலோகத்தால் தானறியப் படுவது. இஃது இக் கோசர் தலைவி அன்னி மிஞிலி யென்பாள் "சினத்திற் கொண்ட படிவ மாறாள்" (அகம் 262) என்பதனால் உய்த்துணரலாவது. இவரை ஒன்று மொழிக் கோசர் என்பது, இருவருள்ளும் ஒன்றற் குரிய வாய்மை மொழியைக் கோச முறையில் மேற் கொள்பவர் என்று பொருளாதல் கண்டு உண்மை யுணர்க. 'கோச நாடு' என்ப பெயரிய சுனைத்தடம் காச மீர நாட்டிலுண்டு.

இவற்றால் காசமீரத் துவராவதிவிட்டு வெளி தென் னாடு புகும்போதே அவர் கூடவே ஆண்டுள்ள கோச

முறை வீரரும வநதனா எனறு கொளவது பொருநதும சானறோா பாடலகளிற கோசா வரலாறும வேளிா வரலாறும சேரக காணப படுதலான இவ வுண்மை எளிதி னறியலாம. வேளிா கொணகானததும கோசா அதன கண ஒரு பாலாகிய துளு நாடடிலும இருநதல சானறோா செயயுடகளிற கேடகப படுதலானும இத துணிபு வலியுறு மெனக இக கருததிற கேறபக கொளளின கோச வீரா காசமீரதது நினறு முனனரே தெனனாடடிற குடியேறி யிருநதன ரெனறும, பினனாத தம இனததா வரிருககும அத தெனனாடடே வநதவ நாடடுக கோசரும வநதுறைநதன ரெனறும தெளிவது பொருததமாகும

இனி இவனை அசோக சககரவாததி தெனனாடடுள ளாகக சிலையி லெழுதிய ஸதிய புததா எனறு நினைபபாரு முணடு அசசிலை யெழுததுக குறிதத ஸதிய புததா வேள புலவாசாலலது வேறுகாரெனறு வேளிா விளககததுச செவவனங கூறினோம ஸதிய புததா எனபதனை ஸதய புததா எனறு பிறழப படிதத தடுமாறறததால இக கோசரை வாயமொழிக கோசா எனபது கருதி அம முடிபிறகு வநதாருமுணடு சிலையில ஸதிய புததா எனறிருபபது பலலோராலும நனகு விளககப படடத லால, இக கொளகையின தவறு புலபபடட தெனக இதனால கோசா ஸதிய புததா எனப பெயா பெறு ரெனக இனி இக கோசருடடலை சிறநது புலவா பாடற குரியராகிய சிலா நனமககளைப பறறிச சிறிது கூறு வேன.

"பூதத சுறறமொடு பொலிநதினிது விளஙகிய
பொயயா நலலிசை நிறுதத புனை தாாப
பெருமபெயா மாறன றலைவனாக
கடநதடு வாயவா ளிளமபல கோசா
இயனெறி மரபினின வாயமொழி கேடபப
பொலமபூணவ ருடபடப புகழநத
மறமிகு சிறபபிற குறுநில மனனா
அவரும பிறருந துவனறிப

பொற்பு விளங்கு புகழவை நிற்புகழ்ந்தேத்த
மகிழ்ந்தினி துறைமதி பெரும" (மதுரைக் 770-79)

என வாழ்த்துதல காணலாம; இதனை கண் "பொய்யா நலலிசை நிறுதத மாறன றலைவனுகக கடந் நடுவாய்வாளிளமபல கோசர்" எனக கூறியதனுல் இம மாறன வாய் மொழிக கோசர் தலைவன் என்று துணியப்படும. பொயயா நல்லிசை நிறுதத மாறனெனபது "வாய மொழி நிலைஇய சேண் விளஙகு நலலிசை வளங கெழு கோசர்" (அகம் 205) என்ற கோசர் வாய்மைச் சிறப்பொடு பொருநத நிறபது கண்டு கொளக நசசிஞர்க இனியர் ஈணடு ஒருபடியாகத துணியாமல "மாறன இவன் குடியிலுளள பாண்டியன; அன்றி ஒரு குறுநில மன்னன் என்றனு மொன்று" என வுரைத்தது நோககுக. மாறன றலைவனுகக கடநதடு கோசா என்ற தொடர், மாறன எனபவன தமககுத தலைவனுகச சென்று அடுகின்ற கோசர் எனப பொருளபட நிறறலான இமமாறன ஓர் குறு நில மன்னனுகிய கோசன என்றே துணியப்படு மெனக. இவன மாறன என்று பெயர் பூண்டது பாணடியர்ககுரிய நண்பினனுய் அவனுககுப பெருந் துப்பாகிய தனமை பற்றி யென்றுணரலாம. இஙஙனங கொளளாது ஈண்டு மாறன பாண்டியன என்றற் "பாண்டியன தலைவனுகச சென்றடு கோசர் நிற்புகழுந் தேத்த உறைமதி" என்று பொருள பட்டு இவ் வாழத்துக கேட்கின்ற பாண்டியனினும வேறேர் பாண்டியன றலைவனுகக கோசா சென்றடுதல தோற்றி நிற்பதனுல அது பொருளாகா தெனக நசசினுர்க கினியர்ககே இது திருவுளள மில்லாமையாற "குறுநில மன்னன என்றனு மொனறெண"ப் பிறிதொன்று கூறியொழிந்தார் எனக. மாறன றலைவனுகக கடந்தடு கோசர் நின்வாய் மொழி கேட்ப என்றதன பின, ஐவருட் படப் புகழ்ந்த அவரும பிறரும நிற் புகழந தேத்த என்றது, குறுநில மன்னராகிய ஐம்பெரு வேளிரும் பெரு வேநதராகிய பிறரும் நின்னைப் புகழ்ந்து வாழத்த என்ற வாறும. இவற்றுற் கோசரும் கோசர் தலைவனுகிய மாறனும பாண்டியற்குத்

துப்பாதல் நனகு துணியலாம. இதனுலிவர் பாண்டிய ராற சிறப்பிக்கப பெறறு வாழநதது உய்த் துணரலாகும. மேலும மதுரைக காஞசியுள், (507—510)

"மழையொழுக கறுஅப பிழையா விளையுட்
பழையன் மோகூ ரவையகம் விளங்க
நான மொழிக் கோசர் தோன்றி யன்ன
தாமே எந தோனறிய நாறபெருங் குழுவும்"

எனக கூறுதலான மோகூர் மனனனுகிய பழையனுககும கோசருககும ஒரு தொடர்புண்மை புலப்படுவது; இல்லையேல இவன மோகூரவையகம விளஙகும வண்ணம் இக கோசர் சமயத்து வநது தோனற வேண்டியது இலலையா மெனக இத் தொடாபு அவவரசற்கும இக கோசர்ககு முளள குடிப் பிறப பொறறுமையே ஆமெனின நனகு பொருநதும. உறறுழி யுதவுவேம எனறு தம்மினத்தவனுன மோகூர் மனனன பழையனுக குரைதத வண்ணம அவன அவையகம விளஙக வந்து தோனறி உதவியதனையே இது குறிப்ப தெனறு நனகுணரலாம இவ்வுதவி மோரியா தெனறிசையில் வடுகரை முனனுறவிடடுப் படை யெடுத்து வநத போது மோகூர் அவர்ககுப பணியாமல எதிர்த்து நின்ற நிலையில அம மோகூாககுத துணையாக அவர் ஆலம்பலத்துச சமயததுத தோனறிப் பகைப் படையைச சிதைதத தனையே குறிபப தெனபது,

"பறைபடப பணில மாரபப விறைகொள்பு
தொனமூ தாலததுப பொதியிற றேனறிய
நாலூராக கோசா நன்மொழி போல
வாயாகினறே" (குறுந 15) எனவும,
"வெல் கொடித், துணைகா லன்ன புனைதேர்க் கோசா
தொன்மூ தாலத் தரும்பணைப் பொதியில்
இனனிசை முரசங கடிப்பிகுத் திரங்கத்
தெம்முனை சிதைத்த ஞான்றை மோகூர்
பணியா மையிற் பகைதலை வந்த
மாகெழு தானை வம்ப மோரியர்

புனைதேர் நேமி யுருளிய குறைத்த
இலங்கு வெள்ளருவிய வறைவா யும்பா" (அகம். 251)

எனவும்,

"முரண்மிகு வடுகர் முன்னுற மோரியர்
தென்றிசை மாதிர முன்னிய வரவிற்கு
விண்ணுற வோங்கிய பனியிருங் குன்றத்
தொண்கதிர்த் திகிரி யுருளிய குறைத்த
அறையிறந் தவரோ சென்றனர்" (அகம் 281) எனவும்,

வருவனவற்றான் அறியலாம். இவற்றுள் வடுகர் முன்னுற மோரியர் தென்றிசை மாதிர முன்னிய வரவு என்றது, மோரியர் வடுகரை முன்னிட்டுக் கொண்டு தென்றிசையினிலுள்ள வரையும் வென்று கொள்ள எண்ணிப் படையெடுத்து வந்த வரவு என்றவாறும், இவ் வரலாறு அவர் படை யெடுத்த போது தந்தேர் இனிது செல்லற்கு மலையை யறுத்து வழிகண்டு வந்தனர் என்றும், அப்போது மோகூர் அவர்க்குப் பணியாது எதிர்த்து நின்ற தென்றும், அங்ஙனம் எதிர்த்து நின்ற நிலையின் மோகூர் தளர்ந்தபடி, கோசர் தம் முன் உற்றுழி யுதவுவதாகச் சொல்லிய வண்ணம் அம்மோகூர் ஆலம் பலத்து இன்னிசை முரசு இரங்கத் தோன்றிப் பாசறை கொண்டு பகைப் படையைச் சிதைத்தன ரென்றும் அறியலாம். உற்றுழியுதவுவதாகச் சொல்லியது "கோசர் நன்மொழி போன்று வாயாகின்றே" எனப் பத்துப் பெறப்பட்டது. தெம்முனை சிதைத்த ஞான்றை என்பதனுள் மோகூர்க்கும் கோசர்க்கும் பொதுவான பகைப் படை மோரியர் படை என்று கருதப் பட்டது. மோகூர் பணியாமல் இருந்தது இயல்பாகிய வீரத்தா னும் தம்மினத்தவராய கோசர் சமயத்து வந்து உதவு வார் என்ற துணிபானும் என்று நினையலாம். "தொன் மூதாலத்துப் பொதியில்" எனபவற்றால் பழைய ஆல மரத்தின் அரிய கிளைகளினிழலிலுள்ள அம்பலம் என்று கொள்ளப்பட்டு அதுவே ஆலம்பல மெனனப் பட்டது. இம் மோகூரும் அதனை அடுத்து ஆலம்பலமும் கள்ளக் குறிச்சிச் சேகரத்து இன்று முள்ளனவாதல் நோக்கிக் கொள்க. மோரியர் குறைத்த குன்றத்து அறைவாய்

கள்ளக்குறிச்சி மலையிடை வழியாகும்; அல்லது செங்கண்மராஅத்து அமைவாய் வழியாகுமென்க. இவ்வூரே செங்குட்டுவனை பொருது வென்றதா மென்பதும், கோசர் வந்து தவியதாகு மென்பதும், குட்டுவனஞ்சூர், கோசர் பாடி எனனும இவ்வூர்கள் இம மோகூர்ப் பக்கத்துண்மை யான உயத் துணரலாம். மோகூரை யடுத்துள்ள ஆலம் பலம் என்ற சிற்றூரே கோசர் தோன்றிய மூதாலத்துப் பொதியிலாகு மெனக. பொதியில அம்பலமெனபது தமிழ வழக்கு. இம மோகூரிற் பெரிய அகன்ற பரம் மேடு உள்ள நிலமே பழைய அரணமனை இருந்த இடமாகு மெனபர்

மோரியனனை சந்திர குப்தன் மகிஷ மண்டலத்துச் சிரவண வேள குளத்து வந்து தங்கியது அப்பக்கத்துச சாசனங்களானும பழைய சரிதங்களானுங கேட்கப்படுதலான, ஆண்டு அவனுடன வந்த மோரியர் வழியினர் பினனுந தென றிசையிற செலலப் படை யெடுத்து வருதல கூடு மெனறுணர்க. இம மோரியர் வட நாட்டுப் படை யெடுத்த போது இமையத்து வழியை உண்டாக்கியது,

> "வென்வேல், விணைபொரு நெடுங்குடைக் கொடித்தேர்
> மோரியர்,
> திண்கதிர்த் திகிரி திரிதரக் குறைத்த
> வுலக விடைகழி யறைவாய் நிலைஇய
> மலர்வாய மண்டிலத்தன்ன நாளும்
> பலர்புர வெதிர்ந்த வறத்துறை நின்னே" (175)

எனனும் புறப் பாட்டா னறியக் கிடப்பது. இத் தெனனாட்டு இவர் தேர் வரவிற்குக் குறைத்த அறைவாய் அதனின வேறென் றெண்ணுக; புறப் பாட்டின மோரியர் வடக்கட் குறைத்த உலக விடைகழியாகிய அறைவாயிற, சூரிய மண்டலம எப்போதும் ஒரு பெற்றியாய் நிலையும் என்பதனுன் அது வேறுதல் நன்கு தெளியலாம். புறப் பாட்டுரை காரரும் இந் நிகழ்ச்சி வடக்கண் வெள்ளிமலைக் கப்பால வைத்துக் கூறுதல் காண்க. இம் மோகூர் மன்னன் பழையன், வேம்பினைக் காவன்

மரமாகப் போற்றியதும், இவனை பாண்டியர்கருத் துப் பாதலான், அவன் மாலை யாதல் கருதி யென்றுய்த் துணரலாம். குறுநில மன்னனை தேர்வண் மலையன் சோழர்கருத் துப்பாதல் பற்றி, புலிப் பொறி பொறித்த எயிலுடையனையினுற் போல்வது இஃதென்க, இதனை,

"விடர்ப்புலி பொறித்த கோட்டைச் சுடர்ப்பூட்
சுரும்பார் கண்ணிப் பெரும் பெயர் நும்முன்" (புறம். 174)

எனத் தேர்வண் மலையன் பாடப் பெறுதலான் உணர்க. முன் கோசர் தலைவனைத் துணியப்பட்ட மாறனை, இம மோகூர் மனனன் பழையனை மகன் ஆவன் என்று ஊகிககின்றேனை. பாண்டியற்கு நட்பா யினை தன்மையாற் பழையன் தன் மகனுககு மாறனை என்ற பெயரை இட்டு வழங்கலாயினன் எனக கருதல் தகும். பழையனை மாறனை என்ற பெயர் பாண்டியற்கு வழங்கல் அகத்தில்,

"நெடுந்தேர் இழையணி யானைப் பழையன் மாறன்
மாடமலி மறுகிற் கூட லாங்கண்" (346)

என வருதலா னறியப்படும். இதனுல் மதுரைக காஞ்சியிற் கோசர் தலைவனைக கொள்ளப்பட்ட மாறனு கிய குறுநில மன்னன் வரலாறு ஒருவா றுணரலாம. மோகூர்ப் பழையனைச செங்குட்டுவன் வென்று அவன் வேமபு முதறடிநத செய்தி கூறிய பதிற்றுப் பத்துள (49)

"வெல்போர் வேந்தரும் வேளிரு மொன்று மொழிந்து
மொய்வளஞ் செருக்கி மொசிந்துவரு மோகூா
வலம்படு குழூஉ நிலை யதிர மண்டி
நெய்த்தோர் தொட்ட செஙகை மறவர்
நிறம்படு குருதி நிலம் படர்ந்தோடி
மழை நாட் புனலி னவற்பரந் தொழுக...
..........................
கருஞ்சினை விறல்வேம் பறுத்த, குட்டுவன்"

எனக கூறியிருப்பது காணலாம். இதன் கண் "வேந்தரும் வேளிரும் ஒன்று மொழிந்து வலம்படு குழூஉ நிலை" என்பது வேந்தரும் வேளிருஞ் சூழ்ற்று வென்றி

யெய்தற்குரிய கூட்டுற வென்ற வாறும். குழூஉநிலை எனபது தனைநிலை எனவும வழங்கப்படும். பதிற்றுப் பத்து (76,2) பார்கக. "ஒனறு மொழிந்து வலம்படு குழூஉநிலை" என்பது பழைய கோச முறையில் இரு திறத்தாரும் ஒனறுதலைக குறிககுமென் றெண்ணுகினறேன. இவ் வுண்மை இவ் வீரரை "நெய்த் தோர் தொட்ட செஙகை மறவர்" என்றதனலறியலாகும. ஈண்டு உரைகாரர் "பகைவருடைய உடலில் தாங்கள் எறிநத வேல் முதலிய கருவிகளைப் பறிககின்ற காலத்து அவருடலுகு குருதியை அளைநது சிவந்தகையை யுடைய மறவர் எ. று." என வுரைத்தார், இஙஙனங கூறியவர் "மறவரது குருதியெனககூட்டுக" எனறும விளககினர். இதனல் இம மறவர் மேற் கூறிய குழூஉநிலை மறவர் எனபதும, இவர் பழையன் படையின ரென்பதும் உணரலாம. உரைகாரர் தொட்ட எனனும அரிய சொல் வழககினைச சிறிது சிநதித் திருப்பின இஙஙனங கூறியிடர்ப்படா ரெனக. தொடுதல என்பது சூள செயது சபத மொழிதற்குக கூறும் சான்றோர் வழககாதல் கலித்தொகையில,

"கோனடி தொட்டேன்" (மருதம. 29) எனவும
"நின்னடி தொடுகடனிது" (சிலப. 12, வேட்டுவரி) எனவும்
"தொட்டு விடுத்தேன்" (சிநதாமணி. 1876) எனவும

வருமிடங்களிற் கண்டு கொளக.

இந நெய்த்தோர் தொட்ட செங்கை மறவர் கோசர் தாமெனபது மேலிச செங்குட்டுவன் கடமபரை வெல்லற்குக கடலோடுழந்த செய்தி கூறிய விடத்து (பதிற். 41) "வஞசின முடித்த வொனறு மொழி மறவர், முரசுடைப் பெருஞசமத் தரசு படக கடந்து" எனக கூறுதலா னன் கறியலாகும். ஈண்டு ஒன்று மொழி மறவர் எனறது துளுநாட்டுள்ள ஒன்று மொழிக கோசரை என்பது நன்கு பொருந்துதல காண்க.

"வத்தவன் மறவர் மொய்த்தன" (பெருஙகதை. மகத. 17. 250) என வருதலான் ஈண்டு மறவர் வீரராதல் உணர்க.

இதனல் நெயத்தோர் தொடட செங்கை மறவர் என்றதற்குப் போரினை வெல்லற்கு ஒன்று மொழிநது ஒரு குழூஉநிலையாயத் திரணடு உதிரத்தைத் தொட்டுச சூளுற்ற செஙகை வீரர் எனபது பொருளா மெனக. இது இக கோசரது கோசமுறையினைக குறித்த தென்று நினையலாம. மோகூாககுங கோசர்ககுமுளள தொடர்பு முனனரே நனகு விளககப் பட்டதனல், ஈண்டு மோகூர்ககுத் துணையாய நிலாற மறவா அவர் தாம என பது நெயத் தோர் தொட்ட செஙகை யாற்றெரிய நிற் பது நோககிக கொளக பாண்டியர்ககுத துணையாயினு ரும கோசர் ஆதல முனனரே காடடப படடது இப் பாண்டியர்ககு வினைவலனுய அவன படைததலைமை யெயதியவன அதியன (அதிகன எனவும வழஙகும). எனபாெனருவனுண்டு இதனைக,

> "கூடைகக கோழி வாகைப பறநததலை
> பசுமபூட பாணடியன வினைவ லதிகன்
> களிெறாடு பட்ட ஞானறை
> யொளிறு வாட் கொஙக ராரப்பினும் பெரிதே" (குறுந 393).

என வருதலா னறியலாம. இவ் வதிகன் வேஙகை சேர்நத வெற்பி லிருநதவன எனபதும பசும பூட் பாண டியன் படைததலைவ னெனபதும கோசன எனபதும இரவலர் உளளியது நலகும வளளனமைய னென்பதும,

> "வாயமொழி
> நல்லிசை தரூஉ மிரவலாக் குள்ளிய
> நசைபிழைப பறியாக கழறொடி யதியன்
> கோளற வறியாப பயங்கெழு பலவின்
> வேங்கை சோந்த வெறபகம பொலிய
> வில்கெழு தானைப் பசுமபூட் பாண்டியன்
> களிறணி வெல்கொடி கடுப்பக் காணவர
> வொளிறுவன விழிதரு முயர்ந்து தோன்றருவி" (அகம. 162).

எனபதனலறியப் படுவனவாம. வாய் மொழி நல்லிசை தரூஉம் அதியன் எனறது, இவன் கோசர் குலத்துககுச் சிறந்த வாய் மொழியால இசை தருதல் பற்றி யென்று கொள்ளத்தகும். இரவலர் நசை பிழைப்பறியா அதியன்

என்றதனால் இவன் கொடை மேன்மை அறியலாகும். இவன் வேங்கை சேர்ந்த வெற்பகத்துப் பசும்பூட் பாண்டியன் கொடியிருப்பது கூறியதனாலும், குறுந்தொகையில் (373) "பசும் பூட் பாண்டியன் வினைவல அதியன்" என்றதனாலும், இவன் பாண்டியன் படை முதலியாதல் தெளியலாம்.

> "ஆடுநடைப் பொலிந்த புகற்சியினொடு
> அள்ளனைப் பணித்த வதியன் பின்னறை
> வள்ளுயிர் மாக்கிணை கண்ணவிந் தாங்கு (அகம் 325)

என வருதலான், இவன், நாட்டைக் கொள்ளை கொண்ட அள்ளன் என்பவனைச் சிறைப்படுத்தினான் என்பதும், இவன் இறந்ததன் பின் பாணர் கிணைப் பறை கண்ணவிந்தன என்பதும், அறியலாகும். அள்ளன் என்பவன் அன்னிற் பாண்டியற்குப் பகையாயக் குறும்பு செய்திருந்தவனொருவன் ஆவன், இவன் அள்ளி எனவும் வழங்கப்படுவன்.

> "செழியன் பிண்ட நெல்லின் அள்ளூர்" (அகம் 46)

என்பதனால் இவ்வூர் பாண்டியருடைய நாட்டதாதல் அறிக. ஈண்டுப் பழைய வுரைகாரர் "அள்ளூர்—அள்ளியூர்" என விளக்கியதனான் இவ்வுண்மை யுணரப்படும். அதியன் பாண்டியன் படை முதலியாதலாற் பாண்டியற்குப் பகையாயக் குறும்பு செய்த இவனை அதியன் பிணித்தனன் என்று துணியப்படும். இவ்வுண்மை அறியப் படாமையான் ஈண்டு "புகற்சியினொடு, கொள்ளனைப் பிணித்த வதியன் பின்னறை" எனப் பிழைபடப் படிக்கப்பட்ட தென்க. பாண்டியன் படை முதலியாகிய இவ் வதிகன் களிற்றொடுபட்டது, கூகைக் கோழி வாகைப் பறந்தலையி லென்பது மேற்காட்டிய 393-ஆம் குறுந்தொகைப் பாட்டாலறியப்படும். கூகைக் கோழியார் என்பவர் ஓர் நல்லிசைப் புலவரென்பதும் இவர்,

> "முதுமரப் பொத்திற் கதுமென வியம்பும்
> கூகைக் கோழி யானாத்
> தாழிய பெருங்கா டெய்திய ஞான்றே" (புறம். 364)

எனப்பாடியதனுல் இப் பெயர் பெற்ருரெனபதும் கற்ருரறிவர், இப் புலவர்க்குரிய ஊராகிய **வாகை,** எயினன் என்பவனுடைய தென்பது "என்றும் வண்கை யெயினன் வாகையன்ன விவணலம்' (புறம். 351) என்பதனுலறியப்படும. எயினன் ஊராகிய வாகையில் அதியன களிற்ருெடுபட்டான என்றலால், இவ்வதியன் வாகையிலுள்ள எயினன் மேற்படையெடுத்துப் போய் ஆண்டுப் பொருத போரில எயினனுற் பட்டான் என்று உய்த்துணரலாகும. எயினன வேளிருள ஒருவன எனபது,

> "நுணகோ லகவுநா வேணடின வெணகோட்,
> டணணல் யானை யீயும வணமகிழ்
> வெளியன வேணமா னுஅ யெயினன"
>
> (அகம 208)

என வருதலானறியப்பட்டது; "என்றும வண்கை யெயினன" எனற புறப்பாட்டுத தொடரும "வணமை யெயினன" (அகம. 181) எனபதும, "யானையீயும வண் மகிழ எயினன"என்பதும தமமுளொதது விளஙகி, இவன கொடைச சிறப்புக கூறுதல காண்க இவ் வெயினன ஏழில மலை நனனனுககுத துணையாய அவன படைததலை நின்றவன எனபது மேல விளககப்படும

இவற்ருற் பாண்டியன் படைமுதலியான கோசனுகிய அதகன, நன்னன படைததுணையாகிய வேண்மானெயினனுடைய வாகையூரில இவ் வெயினனுலிறநதான்னறு கொளளப்படும இதனுற் கோசர்ககும வேளிர்ககுமுள்ள பகைமை உய்த்துணரலாகும. இவ்வாறு தன்னினததவனும பெரும படைவீரனுமான அதியன பட்டது பொருது, **கோசனுகிய மிஞிலி என்பவன்** அவனைக கொன்ற எயினனைப் பேய்ககு ஊட்டுவதாக வஞ்சினஞ் செய்து, பாழிப் பறந தலையில் அவனைக் கொனறனன். அதகனும மிஞிலியும் நெருஙகிய உறவினர் ஆவர் போலும, இவவுண்மை

> "காதலி
> முறையின் வழாஅ தாறறிப் பெற்ற
> கறையடி யானை நனனன் பாழி

ஊட்டரு மரபி னஞ்சுவரு பேஎய்க்
கூட்டெதிர் கொண்ட வாய்மொழிமிஞிலி
புள்ளிற கேம மாகிய பெரும்பெயர்
வெள்ளத் தானை யதிகற் கொன்றுவந்
தொன்வா ளமலை யாடிய ஞாட்பின்'' (அகம். 142)

என்பதனால நன்கறியலாகும.

''யாழிசை மறுகிற பாழி யாங்கண்,
அஞ்ச லென்ற வாஅ யெயினன்,
இகலடு கறபின மிஞிலியொடு தாக்கித்
தனனுயிர் கொடுத் தனன், சொல்லியது. (அகம. 396)

என வருதலான,எயினன மிஞிலியொடு தாககிப் பாழியில் உயிர் கொடுத்தனன எனபது நனகறியப் படுதலானும, அதகன களிறொடுபட்டது வாகைப் பறநதலையில் (குறுந. 393) எனறு தெளியப்படடதனுனும, ஈண்டு ''வெள்ளத் தானை யதகற கொனறு'' எனற பாடம பொருந்தாதென் றும ''எயினற கொனறு'' எனற பாடமே பொருநதுவ தெனறும நனகுணர்க. எயினனுடையவூராகிய வாகை யிற் களிறொடுபடட அதகன,ஞிமிலியாற் பாழியிற் பட்டா னெனபது அசமபாவித மெனக, பாழியில ஞிமிலியால் எயினனபடடது,

''வெளியன் வேண்மா ளுஅ யெயினன
அளியியல வாழ்ககைப பாழிப பறநதலை
இழையணி யானை யியறோ மிஞிலியோடு
நணபகலுறற செருவிற புணகூர்நது
ஒள்வாள மயங்க வீழ்ந்தென எனவும''(அகம. 208)
''பாழியாங்கண, அஞ்சலெனற வாஅயெயினன்
மிஞிலியொடு தாக்கித் தன்னுயிர் கொடுத்தனன்''
(அகம. 396) எனவும.

வரும அகபபாட்டுககளால நனகு தெளியப்பட்டதாம். அனறியும ''வாய்மொழி ஞிமிலி'' (அகம. 142) எனபதனால ஞிமிலியும ''வாய்மொழி நலலிசை தருவ மதிகன்'' (அகம. 162) என்பதனால் அதகனும், வாய மொழியாற் சிறநத கோசராதலான் அவர் தம்முட் பொருதார் எனறு கொளவது பொருநதாதே யாகு மெனக. அதியன வாகையிற் களிறொடுபட்டதற்குக

கொங்கரார்த்தது குறுந்தொகையிற் கூறினர், அதியன் கோசன் ஆதலான் அவன் தம் கொங்கு நாட்டு வலியாற் புக்குப் பாண்டியன் துணைவலியாற் குறும்பு செய்தலைப் பொறுத்த கொங்கர், அவனிறந்ததற்கு மகிழ்ந்தார்த்தார் என்று துணிக "கொங்கிளங்கோசர்" என்ற சிலப்பதி காரத் தொடரை ஈண்டைக்கு நினைக்க. கொங்கிற்புக்க கோசர் இழிவு கொங்கர்க்கு மகிழ்ச்சியே விளைக்கு மெனக். மேற்காட்டிய 142 ஆம் அகப்பாட்டில் "காதலி முறையின் வழாஅதாற்றிப் பெற்ற பாழிப்பேய்க்கு ஊட்டெதிர் கொண்ட ஞிமிலி" எனக். காதலியென்பாள் மிஞிலியினுடைய மனைவி எனக். அவள் ஒரு பேய்த் தெய்வத்திற்குச் செய்ய வேண்டிய முறைமையின் வழிபட்டு வசமாக்கிய பேயென்று கொள்க. அப்பேய் பாழியின் கண்ணுள்ளதாகும் "அணங்குடை வரைப்பிற் பாழி" (அகம் 372) என வருதல் காண்க. ஊட்டரு மரபினஞ்சுவரு பேய் என்றது போரில் எதிர்ந்த வீரரைக் கொன்று அவர் உதிரத்தைப் பூட்டினல்லது வேறு வகையாக ஊட்டற் கருமையால், அச்சம் வருதலையுடைய பேய்த் தெய்வம் என்றவாறு. தன் காதலி வழிபட்டு வசஞ் செய்து கொண்டதனாலும் இப்பேய்க்கு வேள் எயினனை ஊட்டுவதாக மிஞிலி வஞ்சினஞ் செய்தனன் எனக். பேய்க்கு ஊட்டு எதிர்கொண்ட மிஞிலி என்றது பேய்க்கு ஊட்டுதலை எதிர்ந்தேற்றுக் கொண்ட மிஞிலி எ-று. வாய்மொழி ஞிமிலி என்றது, அங்ஙனஞ் சொல்லியது மாறுமைக்குரிய வாய்மொழியை விரதமாகக் கொண்ட ஞிமிலி எ-று. காதலி பெற்ற நன்னன் பாழிப் பேய்க்கு எனக். நன்னன் பாழி என்றதனால் இப்பாழி மிஞிலிக்குரிய தன்றென்றவாறும்.

இங்ஙனம் கோசனாகிய மிஞிலி தன்னினத் தவனாகிய அதிகனைக்கொன்ற வேண்மானாகிய எயினனைத் தன் காதலி வழிபட்டு வசஞ் செய்த நன்னன் பாழியிலுள்ள பேய்க்கு ஊட்டுவதாக வஞ்சின மொழிந்து மேற்கொண்ட நிலையில் மேனிகழ்ந்தன இனி, ஆராயப்படும்

கல்லாடனார் அகப்பாட்டில் (113)

“நன்றல காலையு நட்பிற் கோடார்
சென்று வழிப்படூஉந் திரிபில் சூழ்ச்சியிற்
புன்றலை மடப்பிடி யகவுநர் பெருமகன்
அமர்வீசு வண்மகி ழகுதைப் போற்றிக்
காப்புக்கைந் நிறுத்த பல்வேற் கோசர்
இளங்கட் கமழு நெய்தலஞ் செறுவின்
வளங்கெழு நன்னா டன்ன வென்றோள்,

எனக்கூறுதலான், அகுதை என்பவன் கோசர் தலைவன் என்பது புலனாவது. ஈண்டு “அகுதைப் போற்றிக் காப்புக்கைந் நிறுத்த பல்வேற் கோசர்” என்பது அகுதையைப் பாதுகாத்துத் தங்காவலைத் தங்கையிலே நிலைபெறுவித்த பல்வேற் படையையுடைய கோசர் என்று பொருள்படுதலாற் காண்க. அகுதையைப் பாதுகாத்தபடி என்னையெனிற் கூறுவேன்: நன்னன் தானே கனிதின்றற்கென் றாற்றோரத்து அருமையின் ஓர் மாமரம் வளர்த்துப் போற்றினன். அஃதொரு காயைக் காய்த்தது. முற்றிய பெருங்காயான நிலையில் அக்காய் ஆற்றிலுதிர்ந்தது. அதனை ஆற்றிற் குளித்த ஓர் பெண் எடுத்துத் தின்றனள். இத்தவற்றிற்கு அவளுற்றார் பல களிறும் பெண்ணின் நிறையான பொற் பாவையும் கொடுக்கவுங் கொள்ளானாய் அவளைக் கொலை புரிந்தான். இவ்வரலாற்றைக் குறுந்தொகையுள்,

“மண்ணிய சென்ற வொண்ணுத லரிவை
புனறரு பசுங்காய் தின்றதன் றப்பற்
கொன்பதிற் றொன்பது களிற்றொ டவணிறைப்
பொன்செய் பாவை கொடுப்பவுங் கொள்ளான்
பெண்கொலை புரிந்த நன்னன் போல
வரையா நிரயத்துச் செலீஇயரோ வன்னை” (292)

என்பரணர் பாடுதலானறியலாம். இப்பசுங்காய் தின்றவள் கோசர் மகள் என்று நினையத்தகும். இக்கொடுங் கொலையைப் பொறாத கோசர் நன்னன் மாமரமே இக்கொடுங் கொலைக்குக் காரணமென்று கொண்டு அதனை யழித்தற்கு ஒருவன்கட் சூழ்ச்சி செய்தனர். அச்சூழ்ச்சியாவது தங்கள் குலத் தலைவனை அகுதையை அகவன் மகளிர்க்குப் பெரும் பிடிப்பரிசில் தரும்படி

செய்து, அவற்றை அம்மகளிரைக் கொண்டு நன்னன் தோட்டத்து அம்மாமர முதலாகக் கட்டச் செய்தனர். மாமரத்திற் கட்டிய பிடிகள் தங்கள் தலையில் மண்ணைப் பெய்தற்குத் தரையைப் பறித்த நிலையில் மாமரம் வேரோடு ஆற்றிற் சாய்ந்தது. அந்நாட்டில் உள்ளா ரெல்லாம் விறகிற் கொடித்துப் போக மரமேயில்லையா யழிந்தது. இச்சூழ்ச்சிக்குட்பட்டவனை அகுதை மேல், நன்னன் சினந்து படையெடுத்த வளவில் அவனைப் போற்றித் தம் நாட்டைக் காத்த கோசர் சிறப்பினையே 113-ஆம் அகப்பாட்டுக் குறிப்ப தென்பது பின்வரும் மேற்கோள்களான் நன்குணரலாம். அவை வருமாறு —

"நன்னன், நறுமா கொன்று நாட்டிற் போகிய
ஒன்று மொழிக் கோசர் போல
வன்கட் சூழ்ச்சியும் வேண்டுமாற் சிறிதே"
"இன்கடுங் கள்ளி னகுதை தந்தை
வெண்கடைச் சிறுகோ லகவன் மகளிர்
மடப்பிடிப் பரிசின் மானப்
பிறிதொன்று குறித்தவ னெடும்புற நிலையே

(ஷை 298)

இவற்றுட் கோசர் வன்கட் சூழ்ச்சியின் தென்பது, அகுதை மடப்பிடிப் பரிசில் பிறிதொன்று குறித்தத னலை அறியக் கிடப்பது காணக் ஒரு காய் தின்ற தப்பிற்கு ஒரு மகளைக் கொலை செய்த நன்னன் மரமேயில்லை யாகச் செய்யும் இவ்வகவன் மகளிரை என் செய்வ னென்பது துணிய இச் சூழ்ச்சி செய்தனர் ஆவர் நன்னன் மாமரத்துப் புன்றரு பசுங்காய் தின்று கொலை யுண்ட ஒண்ணுதலரிவை கோசர் மகளாதலாற் கோசர் அச்சின் மாறுது அம்மரத்தைை அழித்துத் தொலைக்க ஒரு வன்கட் சூழ்ச்சி செய்தனர் என்று நினைக்கப்படும்.

"நுணங்கு கட் சிறுகோல் வணங்கிறை மகளிரோ
டகவுநர்ப் புரந்த அன்பிற் கழறொடி
நறவு மகிழிருக்கை நன்னன் வேண்மான்"

(அகம் 97)

என்பதனாலும்

"பாடுநர் செலினே
சூழாது சுரக்கும் நன்னன்" (அகம். 349)

என்பதனாலும், இந் நன்னன் இசைவல்ல அகவன் மகளிரன்பினால் அவரை வருத்தாது தான் முன் செய்த கொடுமையை உணர்வன் என்று இவ்வாறு ஓர் சூழ்ச்சி செய்தனர் போலும். இவற்றால் இவ் வகுதை கோசர் குடியினனாவன் என்பது தெளிவாதல் காண்க. பரிசில் பிறிதொன்று குறித்த தென்று பாடியவரும், நறுமா கொன்று நாட்டிற் போக்கிய கோசர் போல்வன கட் சூழ்ச்சியும் வேண்டும் என்று பாடியவரும், பரணரென்னும் ஒரே புலவராதலால் இவ்விரண்டையும் இயைத்து நறுமா கொன்ற சூழ்ச்சி வரலாறே அவர் கூறுவதாகத் துணியப்பட்டதெனக் "சென்றுவழிப்படூஉம் உந்திரிபில் சூழ்ச்சியிற்—கோசர்" (அகம் 113) என்று கோசரைச் சிறப்பிப்பதுங் காண்க. இங்ஙனமல்லாக்கால் அகுதை மடப் பிடிப் பரிசில் பிறிதொன்று குறித்தற்குத் தக்க காரணம் கூற இயலாமை ஆராய்ந்து தெரிக. கோசர் தந்தலைவனை அகுதையைப் பாதுகாக்க வேண்டிய இன்றியமையாமையும் இதனாலெளிதி லுணரலாகும். இவன் கோசன் என்பது இன்னும் ஒருவகையானும் துணியலாம். மதுரைப் பேராலவாயார் பாடிய அகப்பாட்டில்,

"வெளியன் வேண்மான் ஆஅய் எயினன்
அளியியல் வாழ்க்கைப் பாழிப் பறந்தலை
இழையணி யானை இயறேர் மிஞிலியொடு
நண்பகல் உற்ற செருவிற் புண்கூர்ந்
தொள்வாள் மயங்கமர் வீழ்ந்தெனப் புள்ளொருங்
கங்கண் விசும்பின் விளங்குஞ் ஞாயிற்
றொண்கதிர் தெறாமை சிறகரிற் கோலி
நிழல்செய் துழறல் காணேன் யானெனப்
படுகளங் காண்டல் செல்லான் சினஞ்சிறந்
துருவினை நன்னன் அருளான் கரப்பப்
பெருவிதுப் புற்ற பல்வேள் மகளிர்
குரூஉப்பூம் பைந்தா ரருக்கிய பூசல்
வசைவிடக் கடக்கும் வயங்குபெருந் தானை
அகுதை களைதந் தாங்கு" (208)

என்னும் பகுதியால் வேள்குடியினனாகிய வெளியன் வேண்மான் ஆய் எயினன் என்பவன், நன்னன் வேண்மானுடைய பாழிப் பறந்தலையில் மிஞிலி யென்பவனொடு பொருது புண்பட்டு வீழ்ந்ததும், உறவினனாகிய வேள் நன்னன் அருளானாகி அப் போர்க்களத்தைக் காண்டலுஞ் செய்யாது கரந்தனனாக, அங்கு வேள் மகளிர் அழுத பூசலை இவ்வகுதை களைந்தனன் என்று கூறப்பட்டுள்ளது காணலாம். எயினன் வேள் என்பது வெளியன் வேண்மான் என்ன அவனை விசேடித்ததனாலறியலாம். நன்னன் வேளென்பது,

> "நன்னன் வேண்மான்
> வயலை வேலி வியலூர்" (அகம் 97)

என்பதனாலுணரப்படும். இப் பாழிப் போர் வேளிர்க்குங் கோசர்க்கும் நிகழ்ந்ததாகும். 142-ஆம் அகப்பாட்டில் வேள் மாண் எயினனொடு பொருத மிஞிலியை வாய்மொழி மிஞிலியென விசேடித்ததனாலும் வேளொடு பொருதலானும் இது துணியப்படும். கோசர் வாய்மொழியால் இசை பெற்றவரென்பது,

> "வாய்மொழி நிலைஇய சேண்விளங்கு நல்லிசை
> வளங்கெழு கோசர்" (அகம் 205)
> கோசர் நன்மொழி போல, வாயாகின்றே (குறுந் 15)
> "மெய்ம்மலி பெரும்பூட் செம்மற் கோசர்" (அகம் 15)
> எனவும்,
> "ஒன்றுமொழிக் கோசர்" (அகம். 196- குறுந் 73)

எனவும் வருதலான் அறியப்பட்டதாதல் முன்னரே காட்டினேன்.

> "கொடித்தேர்ப்
> பொலம்பூ ணன்னன் புன்னாடு கடிந்தென
> யாழிசை மறுகிற் பாழி யாங்க
> ணஞ்ச லென்ற வா அய் எயின
> னிகலடு கற்பின் மிஞிலியோடு தாக்கித்
> தன்னுயி ரொடுத்தன்ன சொல்லியது (அகம் 396)

என்பதனால், நன்னன் வேண்மான் போர்க்கெழும் போது தனக்குப்புள் (சகுனம்) நாடு கடிந்தெனச் சொல்ல, அந்நிலையில் வேண்மானெயினன் அவனை

அஞ்சலென்று தேற்றி மிஞிலியொடு பொருது தன்னுயிரை அவனுக்காக வழங்கினன் என்று கூறுதல் காணலாம்.

"புள்ளோர்த்துப் படை யமைத்து (அகம் 207)
"புள்வாய்ப்பச் சொன்ன புலவற்கும்! (பு வெ)

என்பனவற்றாற் புள் சகுன நிமித்தமாதல் உணர்க. எயினன் அஞ்சலென்ன வேண்டியதற்குக் காரணமாகப் புள்நாடு கடிந்ததென்ற அச்சச் சொல், நன்னன் வாயிலுண்டாயதென்று தெரிந்து கொள்ளலாம். புள்ளுநாடு கடிந்தென என்ற பாடமும் உண்டென்னும் இதுவே பொருட் பொருத்தமாதல் உணர்க. இனிப் புன்னாடு கடிந்ததெனக் கொண்டு "புன்னாடு என்ற பெயருடைய நாட்டுப் பகுதி தன்னைக் கடிந்ததாக நன்னன் சொல்ல, அவனை அஞ்சலென்ற ஆஅய் எயினன்" எனப் பொருள் கொள்ளினும் இழுக்காது. புன்னாடு சிறுகூற்றமாகக் கொள்க. புன்னாடு ஓரூர் என்று தாலமி கூறுவர்.

இங்ஙனம் தனக்காக உயிர்கொடுத்த எயினன் புண்பட்டு வீழ்ந்ததும் அவனைக் காண்டலுஞ் செய்யாது, நன்னன் வேண்மான் ஒளித்த அளவில், வேண்மகளிர், எயினன் வீழ்ந்தது பற்றியும் தங்கள் நன்னனைக் காணாமைபற்றியும், அழுது பெரும் பூசலிட, அக்களத்து வாய்மொழி மிஞிலிக்குத் துணையாய வயங்கு பெருந்தானையுடனின்ற அகுதை அருளால் இரங்கி வேண்மகளிர் பூசலைக் களைந்தானென்று துணியத்தகும். பகைமையைப் பெண்டிர்பாற் கொள்ளாது அவர்க்குபகாரஞ் செய்த இவ்வகுதையின் அரிய செயலே ஈண்டும் புலவரால் பாராட்டப் பெற்றதெனக.

"பேராண்மை யென்ப தறுகணொன் றுற்றக்கா
லூராண்மை மற்றதனெஃகு" (குறள். 773)

என்ற திருக்குறளையும் அதற்குப் பரிமேலழகர் கூறிய உரையையு நோக்கி இவ்வரிய பண்பின் மேம்பாடுணர்க. எயினனையு நன்னனையுஞ் சார்ந்த வேண்மகளிர் பூசலிடுவதற்குக் காரணம் எயினன் வீழ்ந்ததும்,

நன்னன் கரநதுமே யாகாது, நன்னன் பெண் கொலை புரிநதவனுதலானும, போரிற் பகைத்தவருடைய மகளிர் கூநதலைக கயிறு திரிததவனஆதலானும, பகைத் தவா தமமையும அவவாறு எனன எனன செயவரோ எனனும அசசமும ஆம எனக. நனனன பகைத்தவர். மகளிர் கூநதலைக கயிறு திரிதத செயதி,

"வேநத ரோட்டிய வேந்து வேனன்னன
கூநதன முரறசி யிற் கொடிதே" (270)

எனற நறறிணையானறியப்படும. நன்னன பகை வர் மகளிர்கருச் செய்த கொடுமைகளைச செய்யாது அகுதை வேண்மகளிா பூசல களைநததுவே ஈண்டுக கூறப்பட்ட தெனக. அகுதையும நனனனும பகைத்த நிலையில் இருவரும எதிாபொர நினற களதது, நனனன அசசத்தால எதிர்வராமையால, அகுதையைச சார்நத கோசனுகிய மிஞிலியும நனனனைச சார்நத வேண்மான எயினனும முறபடப் பொருத போது எயினன புண் பட்டு வீழநததும, புளநாடு கடிநத தெனப போர்கருப் புறப்படும போதே அவசகுனங கண்டஞ்சிய நனனன, தனனை அஞசலெனறு தேற்றித் தனககாக உயிர் கொடுத்த அவவெயினனன வீழநததைக காண்டலும செய யாது கரநத இழிவையும, அககளத்து நனனனெடு பொருதற்கு நினற அகுதை பகைத்தவர் மகளிர்கரு இரங்கியாற்றிய உயாவையும, இநத 208. ஆம் அகப்பாட டுக கூறுவதாக நன்கு துணியபபடு மென்க. அழுத மக ளிர்கரு உறவினனுகிய வேள நன்னன் அருளானுக,உற வினனலலாது கோசனும்ப் பகைவனுகிய அகுதை அந் நனனனைச் சார்நத மகளிா பூசல களைநதானெனப் பாராட்டியதாகக கொளக இங்ஙனங கொளளாககால் நனனனை அஞசலெனறவாய்மொழி மிஞிலிககும் எயினறகும நிகழநத நனனன பாழிப போரில, நெடுஞ சேயதாகிய கூடறகட பாணடியன எனறு பிறர் நினைக கினற அகுதை வருவதறகுக காரணமே யிலலையாதல ஆராயநது கொளக. கொணகானத்தைச சார்நதுளள துளுநாட்டுக கோசனுகிய அகுதைககும நனனனுககும

மூண்ட பகைமை காரணமாகவே இப்போர நிகழ்நத தென்று முனைனய மேற் கோளகள கொண்டு துணிந்து கொளக. இப் பாழிப் போரினும இவ வகுதை பெருந தானை யொடு நினறது,

"வசைவிடக கடககும் வயஙகு பெருந்தானை அகுதை"
(அகம. 208)

எனக கூறுதலான் அறியப்படும. இப்போரில மிஞிலி எயினற் கொனறு தன வஞசினத்தை நிறை வேற்றினன எனறு கொளக இப்போர் வென்றியால "பாரத்துத் தலைவனை நனனன" (அகம. 152) எனபத னூற்றெளியப்பட்ட நன்னனுடைய பாரமெனனும ஊர் மிஞிலி காப்பிலடஙகிற்று எனறு தெரியலாம. இதனை நற்றிணையில,

" விளையனபின விலலோா பெருமகன்,
பூநதோள் யாபபின மிஞிலி காக்கும் பாரம"
(265) எனக கூறியதனுலறிக.

இதன்கட் பூந தோளயாப்பு எனபது தோடகவசம

இனி 'அகுதை கூடல' (புறம- )என அகுதைககுக கூடற் பதியைக கூறியதன காரணம ஆராயப் படும. பாண்டியர் கோசரைப் பெருநதுப்பாகக கொண்டவ ரென்பது மதுரைக காஞசியுள,

"கடந்தடு வாய்வா ளிளம்பல கோசா
இயனெறி மரபினின வாயமொழி கேடபப்
பொலம்பூ ணைவ ருடபடப புகழந்த
மறமிகு சிறபபிற் குறுநில மனனா
அவரும் பிறருந துவனறிப்
பொறபுவிளங்கு புகழவை நிறபுகழநதேத்த
. ........ .. .. ...... ... .. ...
மகிழநதினி யுறைமதி"

எனவருதலானறியப் பட்டதனுல, இவ்வகுதை பாண் டியராற சிறப் பெயதிய கோசருளொருவனெனின நனகு பொருநதுமெனக. வேள நனனன கொணகானத்தே கோசர் துளுநாடும் இருத்தலான கோசனுகிய அகுதை வேள நனனன் பாழிககு எயதுதல கூடும. அகுதைகூடல

(புறம். 347) எனக கபிலர் பாடுதலான அகுதை பாண்டியன ருனெனறும்,அவன தன படைததலைவனும கோசனுமான அததனை எயினன கொனறதனால அவனைக கொலலறகு ஞிமிலி யெனனுங்கோசனறுணையாக நனனன பாழிககுப படை யெடுதது வநதானெனக கொளளலா மெனிற கூறுவேன இஙஙனங கொளளின "அகுதைப் போறறிக காப்புக கைந நிறுதத பலவேற கோசர்" எனபதறகுப பாண்டியனைப் போறறிததங காவலை நிறுவிய கோசர் எனறு பொருளாகும அஙஙனமாயின அகுதையாகிய பாணடியன கூடலில அகவன மகளிரககுப் பிடிபபரிசில வழஙகினனெனறு கருத வேணடிவரும. கூடலிலீதத இபபிடிப் பரிசில பிறிதொனறு குறிததுத தநதது நெடுஞ சேயமைககணி கழநததாகும இப்பிடிகளைக கொணடு கொணகான நனனன ஊரில மாமரததை அழிதது நாடடிற போககுவது பொருநதுமா, துளுநாடடுள அகுதை யீதத பிடிகளைக கொணடு நனனன நறுமா கொனறதாகக் கொளவது பொருநதுமா எனறறிஞரோ ஆராயநது கொளவாராகுக. "இனகடுங களளினஃதை" எனற குறுந தொகைககேறப நனைககளளின மனைக கோசா,தீநதேறலறவு" மகிழநது (புறம 396) எனவருவதுங காணக இவவுண்மை தெனனிந திய சிலா சாசனதொகுதி நானகில 388-ஆம எண்ணிலுளள கருவூரப பககததுச சிலையினுளள வடடெழுத்துச சாசனததில,

"ஸ்ரீ கூறறருதை கொல்லி நிறுவன
களகாத்தி கோசமுடைக் கோசமும்
ஐம பெருங்குழுவும சஙகமும்,
இவை காததானடி என தலை மேலன"

எனவருதலான் வலியுறுதல் காண்க. கூற்றருதை என்பது கூறற குதை எனவும கெலலி நிறுவன் எனபது கொலலி நிருபன எனவும கொளளலாம. பொறித்தார் பிழைப்பும படிததார பிழைப்பும இவையாகும. இதன கட்களகார்த்தி கோச முடைக கோசமென்பது கோசர் குலம எனப் பொருளபடும "வண் கோசன் செருந்தை"

என வழங்கியது காண்க. இப்படியே "ஐம்பெருங்குழுவு மதி கோசரும்" எனவருதல் காண்க. (பெருங். வத்தவ 9-5).

கூடல் ஒன்றே கொண்டு அகுதையைப் பாண்டியனென்று துணிவது, "செருநந்தை தன் தென்னுறந்தை" என்றது கொண்டு செருநந்தையைச் சோழன் என்பதனோடொக்குமெனக். இவ்வாறே "தித்தனுறந்தை" என்பது கொண்டு வேண்மானான தித்தனைச் சோழர் குடியினனாகக் கூறுவாருமுண்டு. இவ்வாறு கொள்வதனாலுண்டாகும் இடர்ப்பாடுகளைத் தித்தன் வரலாற்றுள் விளக்கினேன், ஆண்டுக் காண்க. அகுதை பாண்டியனாகாது பாண்டியர் படைத்தலைவனாதலைப் பின் வருவனவற்றானும் உணர்க.

"பொய்யாகியரோ" (233)

என்னும் புறப்பாட்டில் எவ்விமார்பிறப்பட்ட விழுப்புண் பலவென விடியலில் இயம்பிய குரல்,

"பாவடி யானைப் பரிசிலர்க் கருகாச்
சீர்கெழு நோன்றா ளகுதைக்கட் டோன்றிய
பொன்படு திகிரியிற் பொய்யாகியரோ"

எனக் கூறுதல் கற்றறிவார் இவ்விடத்துப் பழைய வுரைகாரர் "திகிரி என்றது திகிரி தைத்தது என்று பிறந்த வார்த்தையை, பொன் றண்டு இரும்பு" எனவுரைத்தார். இதனால் அகுதை மார்பில் இரும்பினாலாய திகிரி தைத்ததென்று, முதலுட் பிறந்த வார்த்தை பொய்யாயினதென்றும், அதுபோல் எவ்வி மார்பிற் புண்பல வென்று மறுநாள் விடியலிற் பிறந்த வார்த்தையும் பொய்யாகுக வென்றும் புலவர் வேண்டுவதாகக் கருதலாம். முன்னொருகால் எவ்வியொடு எதிர்த்த படையிலுள்ள அகுதை திகிரியாற் புண்பட்டு வீழ்ந்தனன் என்ற குரல் எப்படிப் பொய்யாயிற்றோ, அப்படியே எவ்வி புண்பட்டு வீழ்ந்தனன் என்பதும் பொய்யாகுக என்று கருதியது தெளியலாம் எவ்விக்கும் தலையாலங்கானத்துடசெரு

வென்ற பசும பூட்பாணடியனுககும நிகழநத போரிலேதா மெனபது,

> "நீடூா கிழவோன
> வாயவா ளெவ்வி யேவன மேவாா
> நெடுமிடல சாய்நத பசும பூண (அகம 266) எனவும.
> எவ்வி, புனலமை புதவின மிழலையொடு
> ........ ... .. ..
> குபபை நெல்லின முத்தூறு தநத
> கொறற நீள்குடைக் கொடித தோசசெழிய" (புறம. 24)

எனவும வருதலான அறியபபடும. இப்போரில அகுதை புகுவது பாணடியறகு நடபுடைய கோசருட் சிறநத வீரனுதல பறறி யென்று நினைததல தகும். "இளமபல கோசர் நின வாய்மொழி கேட்ப" (மதுரைக காஞசி) என இப பாணடியனே மாஙகுடி மருதனாாற் பாடப்படுதலான இவவுணமை யுணர்க இப போரிற் பசும பூட்பாண்டியறகு வினைவலபாஙகனுயப படைத துணையாய நினற அகுதை, திகிரி பட்டு வீழ்நதானென்று முனனுட் கூறியது பொயயாயிற றெனறலால அகுதை இப் போரில ஊறுபடாது நினறது புலனுகும இவன தன கோசா படை கொணடு பசும பூட்பாணடியனேடு வென்று கூடல புககிருபபது பொருததமேயாகும. பசும பூடபாணடியன தனனூா காததற றொழிலைததன படை வீரனுகிய இவவகுதையிடம அவவமயம நியமித்திருபபன அந நிலையில அவன காவலினுள்ள கூடலை,

> "மணநாறு மாாபின மறபபோ ரகுதை
> குண்டு நீா வரைபபிற கூடல" (புறம 347)

எனக கபிலா பாடினா ரென்று துணியலாம இககபிலர் இஙஙனம பாடும போதே பரணா "செழியன கூடல" (அகம. 116) எனவும பாடுதல கணடு இவ்வுணமை யுணா லாம.

> "பசும பூட பாணடியன
> பாடு பெறு சிறபபிற கூடல" (அகம. 231) எனவும
> "பசும் பூட பாணடியன
> பொனமலி நெடுநகர்க் கூடல்" (அகம. 253)

எனவும் வருவன கொணடு இவவுணமை நோககுக. ஒரே காலதது இரு பாணடியர் கூடலையாணடா ரெனல சிறிதும் பொருநதாமையுணாக தொலகாபபியனுர்,

"ஊரும் பெயரு முடைத் தொழிற் கருவியும்
யாருஞ் சார்த்தியவையவை பெறுமே" (மரபியல. 74)

(நகரும தமது இயறபெரும சிறபபும பெயரும தத்தந் தொழிற கேற்ற கருவியும எலலாரையுஞ சாாத்தி அவை அவை வருதல பெறும எ.று) (உரையாசிரியருரை.)

எனபதனுல அவரவர் பிறநத ஊரைச சார்த்திக கூறறகுடம் படலான், அகுதை பிறநதவூரெனறு அகுதை கூடல என வழஙகினுரெனறுலும பொருநதும இவ வாறேதிததன பிறநதவூர எனறு "திதனுறநதை" என றுலும இயையும. இவவிருபடைத தலைவரும முறையே கூடலினும உறநதையினும பிறந்தவா என்பதையே இவை குறிப்பன எனின அமையும பெரும படைத்தலை வர் மககள தலைநகர்களிற பிறநது வளாநதனர் எனறற் கண் இழுககிலலையெனக திததனுறநதை அகுதைகூடல எனபுழி ஊர்கள இயற பெயரைச சார்தது வநதன வெனக கொளக. சோழனுறநதை செழியன கூடல எனற ஊாகள குடிப் பெயரைச சார்தது வநதன எனக. இச சூத்திரத்தாலும இவரை ஊாபறறிய பெருவேநதர் குடியின ரெனபது இயலாமை நனகு நோககிக கொளக. கூகைக கோழி எனப பெயரிய புலவன பிறநத ஊராதல பறறிக "கூகைக கோழியாரைப் பறநதலை" (புறம்.364) எனப புலவா பாடுதல கொணடு இவவுண்மை துணிய லாம இவவாகை "வணகையெயினா" வாகையாதல முனனரே காட்டினேன எவவிககும பசும பூட பாணடி யர்ககுநிகழநத இப்போரில அகுதை படைத தலைவனுத லலது பாணடியனுகாமை, எவவியைப பசும பூட பாண டியன வெனறதாகக கூறும பல மேற கோளகளாலும தெளிக

இவறறுல இவவகுதை பாணடியாககுத துணைபாய கோசர் போற்றுங கோசா குடியினனுவனெனறு கொளக மறறுப பரணா,

"இன்கடுங் கள்ளி னகுதை களிற்றொடு
நன்கலனீயு நாண் மகிழிருக்கை, யவை"
(அகம், 76) எனக் கூறிய தனைச்
"சீறியாழ்ப் பாணர்க்காப்பப் பலகல னுதவி
நாளவை யிருந்த நனைமகிழ்த் திதியன் (அகம். 331) என
புழிப்போலக் கொள்க.

சிற்றரசர்க்குப் படையுங் கொடையும் முரசும் நாள வையுங் கூறப்படுதல் இதற்கு வரலாற்றிற் பரக்கக்கூறி னேன் இத்துணையுங் கூறியவாற்றாற் கோசருள் அதகன, ஞிமிலி, அகுதை என்ற வீரர் வரலாறு ஒருவாறுணரப்படும்.

## திதியன்.

இவன் பூதப் பாண்டியன் பாடிய அகப்பாட்டில் (25)
"பொருநர்,
செல்சமங் கடந்த வில்கெழு தடக்கைப்
பொதியிற் செல்வன் பொலந்தேர்த் திதியன்
இன்னிசை யியத்திற் கறங்கும்
கன்மிசை யருவிய காடிறந்தோரே"

என வருதலாற் பாண்டியர்க்குத் துணையாவா னென்பது துணியப்படும் இவன் வேளிருள் ஒருவனென திதியன் வேறொருவனென்பது,

"நாளவை யிருந்த நனைமகிழ்த் திதியன்
வேளிரொடு பொரீஇய கழித்த
வாளவா யன்ன வருஞ்சுர மிறந்தே" (அகம் 331)

என்பதனாலறியலாம் இதனாற்றிதியன் வேளிரொடு பொருதற்கு உறைகழித்த வாளுடைமை கூறியதனால் இவன் வேளிருள் ஒருவனாகா னென்று கொள்க தலையாலங் கானத்துப் போரிற் பாண்டியற்குப் பகையா யெதிர்த்து நின்ற ஐம்பெரு வேளிருட் டிதியன் என்ற பெயருடையா னொருவனுண்மை,

"கொய்சுவற் புரவிக் கொடித்தேர்ச் செழியன்
ஆலங்கானத் தகன்றலைச் சிவப்பச்
சேரல் செம்பியன் சினங்கெழு திதியன்
போர்வல் யானைப் பொலம்பூ ணெழினி
நாரரி நறவி னெருமை யூரன்

றேஙகம ழுகலத்துப புலா,நத சாநதின
இருஙகோ வேணமா னியறோப பொருநனென
றெழுவர் நல்வல மடஙக வொருபகல
முரசொடு வெணகுடை யகப படுத துரை செலக
கொன்று களம வேட்ட ஞான்றை'' (அகம. 36)

எனவரும மதுரை நககீரர் பாடடானறியபபடுதலாற் பூதபபாணடியனுற சிறபபிககப் பெறற இததிதியன, பசும பூட பாண்டியனை யெதிாததுப பொருத திதியன ஆகாமை தெளியப்படும இவன வேளிரொடு பொரீஇய கழிதத வாளுடையனெனறதனுனும இவனுககும் வேளிாககு முளள பகைமை நனகறியலாகும. கொண் கானதது வேளிாககும துளுநாடடுக கோசாககுமுளள பகைமை, மிஞிலிககும எயினறகும நிகழநத போரான முனனரே விளககபபடடமை; ாணடைககு நினைகக. மறறு ஆஅய வேளுககுரிய தென்று ''ஆஅய் பொதியில'' எனவும (புறம 128),

''பொது மீக் கூறறதத நாடு கிழ வோயே'' (புறம, 135)

எனவும வருமிடஙகளால நனகறியபபடட பொதியில வேளிர் பகைவனுகிய இததிதியற குரியதாதல எஙஙன மெனிற கூறுவேன பொதியில தெனனவனுகிய பாணடியாக குரித தெனபது,

''வேமபின
வெறிகொள பாசிலை நீலமொடு சூடி
யுடனுநாக கடநத கடலநதானைத
திருநதிலை நெடுவேற றெனனவன பொதியில''
(அகம 138)

எனபதனுல நனகறியபபடும இமமலையிற சிறறர சா பலா ஆஙகாஙகுக குறுமபுசெலுத்தியிருககலாம. ஆக லாற பாணடியாககுத துணையாய திதியனும அப்பொது மீக கூறறதத நாடடினெருசாரிருநதாளுதல இயையு மென்று கொளக இததிதியன வேளிரொடு பொரீஇய கழிதத வாளின வாயினைக கடிய சுடு சுாதநிறகு உவமை கூறியதனுன, இவன வாளின வலியால வேளிரை வென றது உயததுணரலாகும, அவவெனறியால ஆஅயவேளை

வென்று பொருகியிலிற் றென்னவனுக்குத் துணை என்பாள்,

"வாலிது முடாஅது கலத்து முண்ணாது" தங்கட்கியல்பாகிய கோசமுறையிற் பழிக்குப் பழி வாங்குவதாக விரதம் பூண்டவளாய்த் தங்களிற் றலைவராயுள்ள குறும்பியனுக்கும் திதியனுக்கும் நடந்த விரதவரலாறு கூறினள். திதியன் குறும்பியன் துணையாக அங்ஙனம் கண்களைந்த அவ்வூர் முதுகோசரைக் கொன்று தன் இனத்தவர்க்கு ஞண்டாகிய முரணைப் போக்கினன். அன்னி மிஞிலி சினமாறி மிடுக்குடனியலினள். இவ்வரலாறு அகப்பாட்டில்,

"முதைபடு பசுங்காட் டரிற்பவர் மயக்கிப்
பகடுபல பூண்ட வுழவுறு செஞ்செ
யிடுமுறை நிரம்பி யாகுவினைக் கலித்துப்
பாசிலை யமன்ற பயறு புக்கென
வாய்மொழித் தந்தையைக் கண்களைந் தருளா
தூர்முது கோசர் நவைத்த சிறுமையிற்
கலத்து முண்ணாள் வாலிது முடாஅள்
சினத்திற் கொண்ட படிவ மாறாள்
மறங்கெழு தானைக் கொற்றக் குறும்பியன்
செருவியல் நன்மான் திதியற் குரைத்தவர்
இன்னுயிர் செகுப்பக் கண்டுசின மாறிய
அன்னி மிஞிலி போல மெய்ம்மலிந்
தானா வுவகைய மாயினெம்" (அகம். 262) எனவும்,
"தந்தை, கண்கவி னழித்ததன் றப்பற் றெறுவர
வொன்று மொழிக் கோசர் கொன்று முரண் போக்கிய
கடுந்தேர்த் திதியன் அழுந்தைக் கொடுங்குழை
யன்னி மிஞிலியி னியலு
நின்னலத் தகுவியை முயங்கிய மார்பே" (ஷை. 196)

எனவும் வருவனவற்றான் அறியப்படும். பயறு ஆபுக்கெனத் தந்தையைக் கண்களைந்து அருளாது ஊர் முது கோசர் நவைத்த சிறுமையினால் அன்னி மிஞிலி சினத்திற் கொண்ட படிவமாறாள் என்று கூறியது காண்க. ஆ புக்கென என்றதனால் ஆ பயற்றைத் தின்றதில்லை யென்று குறித்தார். இதன் கண் வாய்மொழித் தந்தை என்றது ஊர் முது கோசரோடு ஒரே இனத்தவன் ஆன

தந்தை எனபது புலப்பட நினறது. முது கோசராயிருந தும இன மெனறு நோககாது, நணடந தகுதியன றெனபதும், எண்ணுது எலலா வுறுப்பினுஞ சிறநத கணணை அருளாது களைநதன ரெனருா படிவம எனரூர், பழிககுப் பழி வாஙகக கொண்ட வஞசின விரதமெனபது தெரிய குறுமபியனுநதிதியனும கோசரின மலலாராயின இஙஙனம எளிதில ஒனறுமொழிக கோசரைக கொனறு முரண் போககலாகா தெனக முரண் போககிய எனறதனுல ஓரினத்திறகுள நோநத முரண்பாடு இஃதெனத துணியலாம ஊா முது கோசா பிழையாதலால இவவழககில வேளிா இடையிற புககுக கொனறு முரண் போககல இயலா தெனக கோசா அநநியராற கொலலபபடததகக எளியரலலா எனபதும நினைக ஊர் முது கோசா தம தலைவாககடஙகிக கொலையை யேறறு முரண போய வாழநதன ரெனபதே பொருநது மெனக. மிஞிலி எனனும பெயா கோசா பெயரெனபது வாய்மொழி மிஞிலி எனபதனுலும அவன வேண்மானெயினனைக கொனறவரலாறருனும அறியபபடடது. இனி இத திதியன அழுநதை எனபது திதியன ஆடசியுட் பட்ட அழுநதை எனனும ஊா ஆகும இது சோழுடடு வேளிர் இருநத அழுநதூரின வேறுயக குடமலை நாட்டிலிருநத ஊரா மெனக இனி இத திதியனே பாணடியறகுத் துணையாயச சோழுடடிறபுககுக குறுககையில அனனி எனனும வேளுடைய புனனையாகிய காவன மரததை வெட்டி வீழததினன எனறு தெரிக இது பறறியே திதியன வேளிரொடு பொரீஇய கழித்த வாளவாய் எனறு சிறப்பிககப்படடதெனின நனகு பொருநதும அகத்தில,

> "எவவி, நயமபுரி நனமொழி யடககவு மடஙகான
> பொனனிணா நறுமலாப புனனை வெ கித்
> திதியனொடு பொருத வன்னி போல
> விளிகுவை" (126

என வருதலானிவவுண்மையறிக இதன கண் வேள எவ்வி தனனினத தவனை அன்னிககு நன மொழி

கூறி அடக்கவும் அடங்காது, அவ்வன்னி தன் காவன் மர மாகிய புன்னையை விரும்பித் திதியனொடு பொருது விளிந்த லறியப்படுதலான், இதுவே திதியற்கும் வேளிர்க்கும் நிகழ்ந்த போரென்று கொள்ளத் தகும். எவ்வி நன்மொழி கூறி அன்னியை அடக்கியது தன் வேளிரினத்தவனென் பது பற்றியாகும் இங்ஙனங் கொள்ளாக்கால் வேள் திதியனும் வேள் அன்னியும் பொருதாரெனப்பட்டு இன முறை கெடுதல் கண்டு கொள்க. திதியன் வேளிரொடு பொருதான் என்பதே அவன் கோசனென்று தெளிவித் தல் காண்க. நற்றிணையில்

“அன்னியும் பெரிய னவனும் விழுமியன்
இரு பெரு வேந்தர் பொருகளத் தொழிந்த
புன்னை விழுமம் போல,
வென்னொடு கழியுமிவ் விருவர திகலே” (180)

என வருதலான் இத்திதியன் அன்னியினும் பெரிய னென்றும் பெருவேந்தாய் விளங்கினவ னென்றும் அறியலாம்.

## குறும்பியன்

இவன் “மறங்கெழு தானைக் கொற்றக் குறும்பியன்” (அகம் 262) என்பதனாற் சிறந்த படையுடைய னென்ப தும் அப் படையா லெய்திய கொற்ற முடைய னென்ப தும் அறியப் படும் இவன் திதியனொடு துணையாய் நின்று அன்னி மிஞிலி துயர் கேட்டனன் என்பதனான் இவனுங் கோசனென்றே துணியப்படுமென்க.

## ஆதனெழினி

இவன் கோசன் என்பது

“கடலாடு மகளிர் கொய்த ஞாழலும்
கழனி யுழவர் குற்ற குவளையும்
கடிமிளைப் புறவிற் பூத்த முல்லையொடு
பல்லிளங் கோசர் கண்ணி யயரும்
மல்லல் யாணர்ச் செல்லிக் கோமான்
எறிவிடத் துலையாச் செறி சுரை வெள் வேல்

"வாய்மொழி நிலைஇய சேணவிளங்கு நல்லிசை,
வளங்கெழு கோசா விளங்குபடை நூறி
நிலங் கொள வெ கிய பொலம்பூட் கிளளி" (அகம் 205)

என்றதனுல அறியப்படடதாம, பரசுராமன காசிபனைக கொண்டு வேட்பித்த இடம செலலூரென்பது 220, ஆம அகப்பாட்டான அறியபபடுதலான, பரசுராமன பினனே வருணனை வேண்டிப் புதிதாக உண்டாககிய கடன மலை நாட்டில இச செலலூா இருந்தல பொருந்தா தென்பது தெளியலாம

"செடாஅத் தீயி னுருகெழு செலலூா
கடாஅயானைக் குழூஉச் சமந்ததைய
மனமருங்கறுத்த மழுவா னெடியோன,
முனமுயன றரிதினின முடித்த வேளவிக,
கயிறரை யாத்த காணடரு வணபின, னெடுநதூண"
(அகம்.220) என்பதனுலறிக.

இவன வாட்டாற்று வேளாகிய எழினி யாதனின (புறம் 396) வேறு தறகுச செலலிக கோமான ஆதனெழினி எனபபட்டான இவனூா வாட்டாற்றூா எனனும பெயரான சோணூட்டு அறநதாங்கிச சேகாத்துள்ளது எனக. வாட்டாற்றுக்கும, செலலிக்கும மலைப புறமே கூறுமை யால இது கடன மலை நாட்டுத் திருமால திருப்பதியாகாமை நனகுணரலாம அவனைப பற்றிய புறப்பாட்டில அவனுட் டையும இங்ஙனமே மலையிலலாமற கூறி,

"நனைக் கள்ளின மனைக் கோசா,
தீநதேற னறவு மகிழநது
நிங்குரவைக் கொளைத் தாங்குநது" (புறம் 396)

என்று மாங்குடிகிழாா பாடின ராதலின உண்மை யுணாக இப்பாட்டில அவனை வென்வேல வேளே, வாட் டாற்றெழினி யாதன" என்றதனுல அவன வேளாத லுணர்க. ஆண்டுக களளைத் தங்கள மனையினகணுள்ள கோசர் தீவிய தேறனறவை யுண்டுகளித்துக் குரவை கொண்டு தூங்கும வாட்டாறு என்று கூறியதாகக கொளக வீரா இயலபு கூறுமிடத்தெலலாம நறவும

களும் மிகுதியாக உடன் வருதல் தமிழ் நூல் வழக்கென்பதனை

"நாரரி நறவிற் கொங்கர் கோவே" (பதிற் 85)
"இன கடுங் கள்ளினகுதை" (குறுந். 298)

என்பன போன்ற இடங்களா னுணர்க, "செல்லிக் கோமான் ஆதனெழினி" எனவும் 'வேளே வாட்டாற்றெழினியாதன்' எனவும் வேறு வேறு ஊரும் பெயருங் கூறுதலான் இவர் வேறுபாடுணரலாம் எழினியாதனை வேள் என்றது போல, ஆதனெழினியைக் கூர்மையுங் காண்க. செல் லூர் முதல் வாட்டாறு வரையுங் கோசர் கடற்கரையோரமாகச் சேணுட்டு வதிந்தனர் என்பதனை இவை குறிக்கும் வாட்டாற்றுக் கோட்டை என்பதும் பட்டுக் கோட்டைச் சேகரத்துண்டு இனி இவ்வகப்பாட்டில் (216) இவன் செல்லூர்க் கோமான் என்பதும் இவன், வேலை, எதிர்த்த யானையின் அரிய மார்பில் அழுந்துமபடியெறிந்தனன் என்பதும் அறியப்படுவன இதனுற் கோசர்களி னெறிந்து வரும் பெரு வீரராக விளங்கியது தெரியலாம்.

# தழும்பன்

இவன் பாண்டி நாட்டு மருங்கூர்ப்பட்டினத்தையடுத்த ஊணூரிலிருந்த கோசர் பெரு வீரன் இவனைப் பற்றி அகப் பாட்டில் நக்கீரனார்,

"வாயவாட், டமிழகப் படுத்த. விமிழிசை முரசின
வருநா வரையாப் பெருநா ளிருக்கைத்
தூங்கல் பாடிய வோங்கு பெரு நல்லிசைப்
பிடிமிதி வழுதுணைப் பெருமபெயர்த் தழும்பன்
கடிமதில் வரைப்பி னூணூரும்பா
விழுநிதி துஞ்சும வீறுபெறு திருநகர்
இருங்கழிப் படப்பை மருங்கூர்ப் பட்டினத்
தெல்லுமி ழாவணத் தன்ன
கல்லென் கம்பலை செய்தகன் றேரே" (அகம்-227)

எனக் கூறுதலான் இவன் வழுதியாகிய பாண்டியற்குத் துணைவலியாயவன் என அறியப்படுவன. தனதுப் பாதவாளினுல் தமிழ் நாட்டைத் தனனகப் படுத்திய

வருநர்க்கு வரையாத பெரு நாளிருக்கையையுடைய முரசு டைச் செல்வனும், தூங்கல் பாடிய ஓங்கு பெரு நல்லிசை யினனும் ஆகிய பிடிமிதித் தேறும் வழுதியாகிய பாண்டி யற்கு இவன் போர்த் துணைவனென்றும், போரிற்பட்ட அழகிய பெரும் புண்ணுலை உண்டாகிய தழும்புடைமை யாற் றழும்பன் என்னும் பெரும் பெயருடையன் ஆயினு னென்றும், இவன் காவல் மதிலையுடைய ஊணூரிலிருந் தனனென்றும், அவ் வூர் பாண்டியர் பெருந் திருநகராகிய மருங் கூர்ப்பட்டினத்திற்குத் தெற்கணுள்ள தென்றும் அறியலாம். தழும்பன் என்பது புண்ணின் தழும்பால் எய் திய பெயரென்பது,

> "நெய்வார்ந் தன்ன துய்யடங்கு நரம்பி
> னிரும்பா ணொக்கற் றலைவன் பெரும்புண்
> ஏனாத் தழும்ப னூணூ ராங்கட்
> பிச்சை சூழ் பெருங்களிறு போலவெ
> மட்டி லோலை தொட்டனை நின்மே' (நற் 300)

என்பதனனுறியலாம் நக்கீரர் பாட்டில் வாய்வாள் முத லாக வுள்ளன வழுதிக்கு அடையாகக் கொள்க வழுதி- மாறன் வழுதி இவன் தமிழகப் படுத்தியது புறப்பாட்டில் (51)

> "தண்டமிழ் பொதுவெனப் பொறாஅன் போரெதிர்ந்து
> கொண்டி வேண்டுவ னாயிற் கொள்கெனக்
> கொடுத்த மன்னர் நடுக்கற் றனரே"

என்பன முதலாக வருமடிகளாலும் ஆண்டுப் பழைய வுரைகாரர் "குளிர்ந்த தமிழ் நாடு மூவேந்தர்க்கும் பொது வென்று கூறப்பொறுனாயப் போரை யேற்றுத் திறையை வேண்டுவனாயின் கொள்க வென்று சொல்லி, முன்னே கொடுத்த மன்னர் நடுக்கந் தீர்ந்தனர்" என்றதனாலும் உணரப்படும். வாய் வாளால், தமிழகப்படுத்த இமிழிசை முரசையுடையவனும், தூங்கல் என்னும் நல்லிசைப் புல வரால் பாடப் பெற்ற ஓங்கு பெரு நல்லிசையுடையவனும் பிடிமிதித் தேறுபவனும் வழுதியாகிய பாண்டியன் என வும், அவனுக்கு உறு துணையாயப் போரிற் பட்ட புண்ணு ய லாகித்தழும்பினுற்றழும்பன் எனப்பட்டான் இவனெ

னவும, வழுதிககுத துணையாயதனுல அவன மருஙகூர்ப படடினததை அடுத்து இவன ஊணூரில வாழ கிற பவனெனவும கருதிக கொளக மருஙகூாப் பாண்டி நாட்டுக கடறபககததுாா கோசா பாணடியாககு உறு துணையாதல மதுரைக காஞசி யடிகளைக காட்டி 'முன னரே விளககினேன வழுதிதுணை எனற பாடம எழுதி னர் வழுவே துணைக கொணடு வழுதுணையென வரையப் பட்டது வேறு வேறு பொயப பொருள கோடறகுக கார ணமாயிறறெனக தமிழகப்படுதத பெருஞ சிறபபு வழு தியதாதல, 51 ஆம புறபபாடடால,தெரிநது இவவுணமை எளிதினறியலாம. நறறிணைப பாடடால இத தழுமபன பாணாககுச சுறறம போல விளஙகியவன எனபதும, இவன ஊரிற பாணா பிசசையிற் சூழநது பெறற பெருங களிறுகள வீடடு வாயில தோறும வநது நிறகும எனப தும அறியலாகும பிசசை சூழ பெருஙகளிறு எனபது 'களிறு பெறு வலசிப பாணன' எனபதனுல விளககம, பெறுதல காணக பெருஙகளிறறையும பாணாககுப் பிசசையாக நலகுஞ சிறப்பான ஊணூரின செலவ நிலை குறிததாரெனக இவனைப பரணா,

"வெணணெலரிநா தணணுமை வெரீஇக
கணமடற கொணட தீநதே னிரியக
களளரிககுங குயஞ சிறுசின
மீனசீவும பாணசேரி
வாயமொழித தழுமப னூணூ ரனன (பு.நா. 348)

எனப பாடுதலான இவன வாயமொழியிற சிறநத கோசா குடியினனுதல அறியலாம.

இனிக கலியுள,
"காழ்வரை நிலலாக கடுஙகளிற ெருததல
யாழ்வரைத தஙகியாஙகு" (பாலை. 1)

எனபதனுற பாகன குததுக கோறகு நிலலாத கடுங களிறு யாழிசையின எலலையிலே தஙகினுற போல என றுரைததார்

இவவாறு யாழிசையால மதயானையை வசஞ செயத செயதி யதஸநேசததுக கோசத்திலிருநத

உதயணற்குரிய சிறப்பென்பது பெருங் கதை வல்லார் நன்கறிவர்.

"களிறு பெருந்தல யாழ்வரைத் தங்கியாங்கு"

என இறந்த காலத்தாற் கூறுதலால், இது பழையதோர் நிகழ்ச்சியைக் கருதிய தென்று நன்கு துணியலாம். கலியில் இச் செய்தி கூறியவர் கொங்கிற் கருவூரிலிருந்து அரசாண்ட சேரர் என்பது இவரைப் பேய் மகளிள வெயினி பாடிய புறப் பாட்டில்,

"அரிமயிர்த் திரள் முன்கை
வாலிழை மட மங்கையர்
வரிமணற் புனைபாவைக்குக்
குலவுச் சினைப் பூக்கொய்து
தண்பொருநைப் புனல்பாயும்
விண் பொருபுகழ் விறல் வஞ்சிப்
பாடல் சான்ற விறல் வேந்தனும்மே" (புறம் 11)

என வருதலானும் அதற்குப் பழைய வுரைகாரர், "ஐம்மையை யுடைய திரண்ட முன்னங் கையினையும் தூய ஆபரணத்தையும் உடைய பேதை மகளிர் வண்டலிழைத்து சிற்றிற்கட் செய்த பாவைக்கு, வளைந்த கோட்டுப் பூவைப் பறித்துக் குளிர்ந்த ஆன் பொருந்தத்து நீரின் கட் பாய்ந்து விளையாடும் வானைமுட்டிய புகழினையும் வென்றியையு முடைய கருவூரின்கட் பாடுதற்கமைந்த வெற்றியையுடைய அரசனும்" என்றுரைத்த தனுனும் அறியப்படும் இவர் கோசர் வதிகின்ற கொங்கிற் கருவூரிலிருந்து கொங்கிளங் கோசர் முன்னை வரலாறு தெரிந்தவ ராதலால் அவ் வுதயணன் செய்தியை ஈண்டுக் கூறிக் காட்டினரென நன்கு துணியலாகும். பிற்காலத்து இத் தமிழ்நாடாண்ட பல்லவ வேந்தராலும் இப்புகழ் போற்றப்பட்ட தென்பது பாகூரப் பட்டயத்து நந்திவர்ம பல்லவனை, "வாரண தந்த்ரி விஷயே வத்ஸேச வரஸமாந" என்று பிரசஸ்தியாற் கூறுதலான் அறியப்படும் இனி இவர் "நாலூர்க் கோசர்" (15) எனக் குறுந்தொகையில் வழங்கப்பட்டனர்

இனி நற்றிணை 265 ஆம் பாட்டில்,

"வீளையம்பிள விலலோா பெருமகன
பூந்தோன யாபபின மிஞிலி காககும பாரததனன"

என வருதலான, இக கோசர் பூத தொழில செயத தோளயாபபாகிய ஒருவகைககுபபாயமணியும இயல பின ரென றறியப படுவது. வடமொழியிற கோசம கவசத் திறகுப் பெயராதலான அதை எப்போதும அணிநதவா கோசர் எனப படடனரெனின இவா வீரத்திற்கும படைத் தொழிறகும பொருநது மெனினும், பல நாட்டு வேநதா பரிவாரததிற காவற படையிலுளள வீரா பலர்க கும இக குப்பாயமுணமை கேட்கப படுதலின, இவர்ககே சிறநத அடையாளம அஃதாகாமை உணர்க. "கஞசுக மாகக ளீரைஞநூற்றுவா" சேரன செஙகுடடுவன பரிவாரத்திற் கூறப்படடாலும அவரைக கோசரென வழஙகாமையாற றுணியக கூடவிலலை.

இனி வாலமீகி ராமாயணம 32 ஆம சருககதது. "பிரமற்கு மகனாகிய குசரெனபவா பெருந தவம் புரிநது நோனபுகளைத தவறாது செயது தருமஙகளை யுணர்நது பெரியோாகளைப பூசிததுப பெருமை பெற்றி ருநதார் அநத மகாத்மா நறகுலத்திற் பிறநது நல லொழுகக மிகக வைதர்ப்பி எனபவளிடததில நறகுணங களாற றமமை யொதத குசாமபன, குசநாபன, ஆதூர்த் தரஜஸ், வஸு எனனும பெயருளள நானகு புதலவ ரைப பெறறா (2) குசா க்ஷததரிய தாமததைச செயவ தில விருப்பமிககவராகி, ஒளி நிறைநதவரும், பெரிய ஊககமுளளவரும, தருமததினிறபவரும, வாயமையே பேசுகினறவரும ஆன அப புதலவரை நோககிக குடி களைப பாதுகாததல செயயுஙகள, தாமததை நிரமப அடைவீர்கள என்று சொனனா.

உலகிற் கொதத நரரிற சிறநத அநநாலவரும குச ருடைய வாாததைதயைக கேடடு அபபோதே நானகு நகரஙகளிற புகலாயினா. ராம பேரொளி நிறைநத குசாமபர் கௌசாமபி எனற நாமபுரியை உணடாககி னர். தர்ம சிநதையராகிய குசநாபர் மஹோதயம என

னும புரததை உணடாககினா. ஆதார்த்த ரஜஸ என னும மகிபதியானவா புரஙகளிற சிறநத தர்மா ரண்யம எனனும ஊரை உண்டாககினர் வஸு எனபவர் கிரிவருஜம எனபதை உணடாககினா."

எனக கூறப்படுதலான குசர் எனபவரின மககள நாலவர் நாலூர்களைப் படைததனா எனபது கேடகப படுவது. இக குசா வழியினா கௌசா எனபபடடு அவரே கோசர் எனப் பட்டனர் என றும, இவர் முதன முதல் நாலூரினின று பெருகியதனல நாலூாக கோசர் எனப் பெயர் சிறநதன ரென றும கருதுவது மிகவும பொருநதியதாகும

இனி வதஸன எனனும ஓரரசன ஆணடதனற கௌசாமபியைத தலை நகராகக் கொண்ட நாடு வதஸ தேசம என வழஙகபபடட தென றும, அவ வதஸ ராஜன தன பிறபபின தூயமையை உலக றியத தீமேன டநது ஊறுபடாது நின று காட்டினன என றும, இவ வாறு அரியதோா திவய சோதனையாகிய கோசத்தை மேற கொண்டொழுகியதனல அவன முதற கோசன எனப் படடான என றும, இக கோசம நிகழ்ததிய காரணத்தினல இவன வழியினா வாயமொழிக கோசா எனப்படடா ரென றும நினைதறகு இடனுணடு வதஸ ராஜன தீமேனடநத செயதி Cambridge History of India Vol I. பககம 134 எனபுழிக கணடு கொளள லாம. இவ வதஸ ராஜன வழியினனுகிய உதயணனைப பெருங கதைக நூலாா,

"வாழ்த லாறறுன வாயமொழி யரசன"

எனக கூறியதும இமமரபு பறறிய தெனின நனகு பொருநதும கோசம திவய சோதனைககுப பெயரென பது கோசததின பல பொருளகளுள திவயம எனபதும அதறகுப பொருளென று அமரஸிமஹன தன நிகண டிற கூறுதலான அறிநதது இக கோசம தேசாசாரத தால ஆஙகாஙகுப பலவேறு வகையாக நிகழும அக கினி சோதனை சீதாபபிராட்டியாா புரிநது காட்டியது.

காச்மீரத்தில் ரகத கோசம நிகழ்ந்தது முன்னரே கூறி னேன். மிருதிகளிற் காளி கோயிலிலும பைரவர் கோயி லிலும் அபி மந்திரித்த நீரைக் குடிக்கச் செய்வது கோசம எனக் கூறுவர் ரகத கோசம வாய்மையினும நட்பினும பிறழாமைக்கும மேற் கொள்ளப்படுமெனபது மேலே காட்டினேன.

இக் கோசகுலம எதிர்த்த படையில யானையை யல லது எறியேம என்று திவ்ய சபதஞ் செய்து ஹஸ்தி கோசம் எனனும ஒரு குழுவாகவும, எதிர்நத வீரரை யலலது எறியேம என்று சபதஞ் செய்து வீரகோசம எனனும குழுவாகவும வழங்கப்படும

இவ் வுண்மை,

"வேந்தூர யானைக் கல்லது
தேந்துவன போலான்ற னிலங்கிலை வேலே" (புறம். 301)
எனவும

"கறையடி யானைக் கலலது
துறைகழிப பறியா வேலோ னூரே" (புறம 323) எனவும
வருவன.

யானை எறியும விரைப பற்றிய னவாதலானும்,
"தானால் விலங்காற் றனித்தாற் பிறனவரைத்தால்
யானை யெறிந்த விளிவரவால்—யானை
ஒருகை யுடைய தெறிவலோ யானும,
இருகை சுமநதுவாழ வேன" (தொல. புறததிணை. 5 உரை)
எனவருவது,

யானை எறியாது வீரரை எறியும வீரனைப
பற்றியதாதலானும உணரலாம.

சாளுக்கிய ஜெயஸிமமன சாசனததில "ஆகளுப் திரத்ர ஹஸ்தி கோச வீர கோச. (Epigraphia Indica Vol. 19 பக்.257) எனவருதலானிப பாகுபாடுணரலாம் கருவூர்க்கும் கீழபால மூன்றுகல் தூரத்தில் வண்டி வழி யின் பக்கத்துக் கிடக்கும வட்டெழுத்துள்ள ஒரு சிலையில,

ஸ்ரீ "கூற்றருதை கெல்லி நிறுபன களகா
. . த்தி கோச முடைக கோசமு......
. . . ...று ம்பெருங குழுவு சங்கமிவை காத்தான்
"அடியென றகேமெலன"

என்றார் சிதைந்த வெண்பா உள்ளது சாசன வெளி யீட்டாலறியப் படுவது இதன் கட் கூறற்றுறை எனபது அறுகைஎனபவன கூறறுள் ஏறு சஙககாலததுச செஙகுட டுவனுக்கு நண்பினனுய, போர்கா மலானறகுப பகையா யிருநத "அறுகையை" தானா இப்படிப பிழைககக எழு தினரோ என நினைப்பு வருகினறது பினனே கெலலி நிறுபன் எனபது கொல்லி நிருபன் எனபதாகும கொல்லி நிருபன சேரன் எனபது தெளிநதது.

"கொல்லி யாணட குடவர் கோவே" எனபது சிலப்பதிகாரம

இதன மேல களகார—களகரா எனபதாகும, களகததவ ராக எனபது பொருளாம இதன பின இரணடோ ரெழுதது விடுபட்டிருகக வேணடும அஙஙனம விடுபட டாலும (அ)ததி கோச முடைக கோசமும எனனும தொடரை இவ விரண்டாமடி நனகு தெளிவிப்பதே யாகும அததி கோசம எனனும குழு வினையுடைய கோசர குடியும எனபது பொருளாகும. மூனறு மடியில ஐமபெருங குழு கூறப்படுதலால "ஐம பெருங குழுவு மத்தி கோசமும" எனனும பெருங கதைத தொடர போல வநத தொனறெனற நனகு துணியலாம. அததி கோசததார "குழுவின பெயர" எனக கொணடு அது "நானதிரணடு ஒரு துறைககண உரிமை பூணட பலலோர மேல் எக் காலதததும நிகழும பெயர" எனறு சேனு வரையரும நச்சினாக்கினியரும விளக்குதலான இக குழுப பெயரியலபு உணரலாம (தொல. சொல சூத, 162). திரணடு ஒரு துறைக கண உரிமை பூணட பலலோரு டைய குழுவின பெயர அத்தி கோசம என்று இவருரை யால அறியப்பட்டதனுல, இது போர்த்துறையில யானையே எறிநது பல உரிமை பூண்ட பெருவீரர் குழுவா கத துணியப பட்டது. உரிமை பூண்ட எனபது வீர சப தஞ செய்து அவ வுரிமையை மேறகொண்ட எனறு. இனி யானை யேறிப் பொருதறகுக கோசம (திரவியம) பெறறவர அததி கோசததார எனினும அமையும. இது கொநதழலஞசாக குஞசரமீ வாநதார கோடியே விருத

தியா ருடையார்" (சிந்தாமணி-2156) என்பதனானும், நச்சினார்க்கினியர் ஆண்டுக் குருச்சரங்களை எறிவார்கள் கோடி பொன்னைச் சிவிகமாக உடையராயிருப்பார்" எனவுரைத்ததானும் உணரலாம். அதற்கு கோசமுடைக் கோசம் என்றதனால் இவ்வூரினர் கோசக் குடிக்குரிய தென்று துணியப்படுதல் காண்க. "கோசரை இருமபிடம் படுத்தவடு வுடை முகத்தர்" (அகம் 90) என்றதற்கியைய, இச் சிந்தாமணிப் பாட்டில் "முந்நமரு நம்முள் முழுமெய்யிருமபு மேய்ந்திட்டு வெஞ்சமம் விளைத்தார்" எனக் கூறியதுங் கண்டு கொள்க. இத் தமிழ் நாட்டிற் பண்டு கோசக் குடி ஆயிரமாயிரமாகச் சிறந்து விளங்கிய தென்பது, திருநெல்வேலியைச் சேர்ந்த கல்லிடைக் குறிச்சியிலுள்ள **கோசக் குடிப் பெருமாள் கோவிற்** சாசனங்களால் அறியப்படுவது இவ்வூரிலுள்ள திருமாலுக்கு நாலாயிர விண்ணகரப் பெருமான் எனவும், சிவபெருமானுக்கு நாலாயிர வீச்சுரமுடையார் எனவும் வழங்குதல் காணலாம். (See. Topographical list of S. Indian Inscriptionsns Vol III Tinnevelly Dt Nos.41,43, 44, 48, 49, 50) இப்பெயர்கள் கோசர் நாலாயிரவர் பெற்ற பெயரென் றெளிதிலறியலாகும். கோசக்குடிக் கோயில் என்ற வழக்கே இவ்வுண்மையை வெளிப்படுத்தல் காண்க. இவ்வூராப் பக்கத்துள்ள அம்பாசமுத்திரத்தின் பழம் பெயர் இளங்கோயக் குடி என்பது சாசன வல்லார் கண்டறிவர் (ஷை 28, 29) கோவிற்பட்டியைச் சார்ந்த கழுகுமலையிற் கோசக்குடித் தெரு என்றொரு தெருவுளது (ஷை.250) காணலாம் இக் கழுகுமலைச் சாசனங்களில் "நாலூர், நாலூர் என்ற பெயருடையனர் பல்லிடத்தும் வருதல் காணலாம் (See South Ind Inscr Vol. V 354, 355, 356, 357, 404). இக் கல்வெட்டுக்களில் (ஷை Vol VI Nos 425, 427, 443, 44 இங்குவந்த நாயன் என்ற பெயரும் மிக வருதல் கண்டு கொள்ளலாம், இப்போது கழுகுமலை எனப்படும் அக் காலத்துக் கோசர் கழுக மலை என்று வழங்கிய தென நினைகின்றேன். இம் மலையடியிலுள்ள கோசர் குடித் தெரு இவ்வுண்மையை

வலியுறுத்தும், இக்கோசர் ஒரு திரளாகச் சபதஞ் செய்து கொள்பவரென்பது இவ்வூரை யடுத்துள்ள "குழுவாணை நல்லூர்" என்ற பெயரான் ஊகிக்கப் படுவது. இக் குழுவாணை நல்லூர்க் கோசர் நாம் குறுந் தொகையில் நல்லூர்க் கோசர் என வழங்கப்பட்டனரோ என ஐயுறுகின்றேன். அன்றி மேலே காட்டிய கழுகு மலைப் புறத்து நாலூர் பற்றி நாலூர்க் கோசர் எனப்பட்டன ரெனினும் பொருந்தும். இவையெல்லாம் பாண்டி நாட்டுப் பாண்டியர்க்குத் துப்பாயக் கோசர் பெருந்திரளாக வதிந்தன ரென்பதை வற்புறுத்து மென்க. வத்ஸ கோசர் தமிழ் வேந்தர் மூவருட் பாண்டியர்க்குத் துப்பாதற்குக் காரணம், வத்ஸ தேயத்தார் பாரதப் போரிற் பாண்டவர் படையை அவரிடங்கையினின்று காத்தா ரென்று மஹா பாரதத்துக் கேட்கப் படுதலானும் உய்த்துணரலாகும். அன்று தொட்டே வத்ஸ கோசர் பஞ்சவர்க்கு நண்பினராதல் இதனானுணரப்படும். பாண்டிய தேயத்து வத்தராயன் எழுத்து" என்பதும் பயில நாணலாம் (S. I. Inscr. Vol V. No. 418)

இனிக் கோசர் குடியினார் இந் நாட்டுச் சிறு பகுதிகளை ஆண்டு தலைமை யெய்திய நிலையில் இவர்களை வத்ஸ ராஜர் வத்தராயர் என்று வழங்கத் தலைப்பட்டனர் என்பது மேற் கூறிய சாசனந் தையெழுத்துக்களாலும்,

> "புயன் மேவு பொழிற்றஞ்சை முதற் பஞ்ச
> நதிவாணன் புதல்வன் பூண்ட
> வயன் மேவு களியானை முடி கொண்டான்
> மாநெடு வேல் வத்தர் வேந்தன்
> இயன் மேவு தோள்பயற் கிருபதந்தையாண்டி
> லிடாக் கரம்பைச்
> செயன் மேவு மீசாகக்குத் திருநந்தா
> விளக் கொன்று திருத்தினனே."

என்னுஞ் சாசனப் பாட்டானும் அறியப்படும் (S. I. I. Vol. IV. 1338) ஸ்ரீ குலோத்துங்க சோழ தேவர்க்கு யாண்டு நாற்பத்தாறாவது திருவிந்தளூர் நாட்டுக் கஞ்சாற்றன் பஞ்ச நதி முடி கொண்டானான வத்தரா

யன மாதா பிதாக்களைச் சாத்தி இடாக் கரமனை மூல ஸ்ரீ வீமநாத முடையார்க்கு விளக்கொன்று" (S I Inscr. Vol. IV No 1339 A) என்பதனுலிவன் சோணாட்டிருந்தவன் என்பது புலப்படுவது கோசன் செருந்தை உறந்தையிலிருந்தது முன்னரே காட்டினேன் இவரெல்லாம சோணாடுசெல்லுமையூடுத்த நியமத்திருந்த கோசர் வழியினராவார்.

இனி நானமொழி நாடு விடுகாதன் ஆன வத்தராயன் என்பவனொருவன் நாமங்கற சாசனத்தால அறியப்படுகின்றான் (Top, List of Inscr. Trichnopoly No 213) இச் சாசனம நான மொழிக் கோசர் என்ற மதுரைக் காஞ்சியின பொருளை நனகு விளக்குதல காண்க. வத்ஸ ராஜன் ஒருவன் ஆரியாக்குத் திரணி என்ற ஊரை அளித்தது (ஷை. No 291) ஆவது சாசனத்தாலறியப் படுவது. இவரெல்லாம கொங்கிற கோசராவரென்று கருதுகின்றேன் வசசுத நாளளாயிரம கொண்டவனும இக்கொங்கு நாட்டவன் என நினையலாம இனி "வாயமொழி வஞ்சன' எனபவன பாயல மலைக்குக் கோவாகப் புறப்பாட்டில வழங்கப்பட்டுள்ளான வதஸன எனனும பெயர் வமசன எனச சைந பௌதத நூல்களில மிகுதியாக வழங்கப படுதலால இப பாயற கோவும வத்ஸ தேயத்தான என ஊகிக்கினறேன். இதற்கேற்பவே இவனைக் கோசாக்குச சிறந்த வாய்மொழியால விசேடித்து "வாய மொழி வஞ்சன" எனப் பாடுதல் காணக. மற்றுக கொளு எழுதினவர் சேரமான வஞ்சன என்றது, அவன சேரமானுடையவன என்பது பற்றியென நினையலாம இது பிறகாலத்துப் பாண்டிய சாசனங்களில அதிசய பாணடிய வத்தராயன், விககிரம பாணடிய வததராயன (S.I I Vol. V Nos. 418) என வருவன போலக் கொள்ளபபடும. பாணடிய வத்ஸ ராயன என்பது பாணடியனுடைய வத்தராயன் என்று பொருள படுதல கண்டு உண்மை யுணர்க. புறப்பாட்டின கொளுவில பாண்டியன கீரஞ்சாத்தன (178) எனபதும

இவ்வாறே வந்தது காண்க. "கருவூர சேரமான் சாத்தன்' (குறுந்தொகை. 268) என்வருதலாலும் உண்மை யுணரலாம் இதனகட் சாத்தன் சேரமானுக்காது கருவூர சேரமானுடைய சாத்தன் என்றுதல் கண்டு கொள்க. "சோழன் உய்யவந்தான் குருகுலராயன்" (572 of 1922 Epigraphic Report—1923) என்வருவது காணக குரு குலராயன் என்பது வத்ஸராயர் பூண்ட மறு பெயர் உதயணனைக் குருகுலக் குரிசில் என்பது பெருங்கதை யிற் கண்டது. "கோட்டாது யாப்புக் குருகுலக் குரிசில், வாடா நறுந்தார் வத்தவர் பெருமகன்") (பெருங்கதை 1-15-26-27) என வந்தது காண்க. புறப்பாட்டில் வஞ்சன் சேரனதான் என்ற கேற்ற குறிப்பு ஒன்றுமில்லாமை நோக்கி உண்மை யுணர்க இவனிருந்த மலை "சாய மலை" என்ற பெயருடனிப்போது மலை நாட்டிலுள்ளது காணலாம் சாயமலை-உங்குத்தற்குரிய இடமாகிய மலை எ.று இனி,

> "மெய் சொல்லாவி ராவணனை மேலொடி யிடழித்துப
> பொய் சொல்லா துயிர் போனன்"
>
> (தேவா புள்ளிருக்கு வேளூர்)

கழுகரையன் என்பது பற்றிக் கோசர் தாம் வாய் மொழிக கிழையவது கண்டு கழுகுமலை யென்று பெயரிட்டனரெனின் அமைவுடையதாகும்

இனி, நற்றிணையில்.

> "வரைபோல யானை வாய்மொழி முடியன
> வரைவேய புரையு நற்றோள"  (390)

என்பதனாற் கூறப்பட்ட வாய்மொழி முடியனும் இக் கோசர் குடியினனென்ன நினையலாம் மேலே சாசனத்துக் கூறப்பட்ட 'காரியானை முடிகொண்டான் மாநெடு வேல் வத்தர் வேந்தன்" என்பவன் இச் சங்க காலத்து 'வாய்மொழி முடியன' வழியினன் என்று நினைவது பொருந்தும்

இனிக் கோயன் பள்ளி என்பது கருவூரை யடுத்துள்ளது. இதனற் கோசன் எனனும் பெயர் கோயன் என

வழங்கப்பட்டதென் றுணரலாம். கோயன்புத்தூர் என்பதும் இப்படிப் பட்டதேயாம். இக் கோயர் குடி கோய் எனவும் வழங்கப்பட்ட தென்பது இளங் கோயக்குடி என்ற பெயரான் அறியலாம் முள்ளி நாட்டு இளங் கோயக்குடி (அம்பர் ஸமுத்ரத்தின் பெயர்) என்பது சாசனம் (Top List. Tinnevelly Dist. Nos 28, 29 பார்க்க) "இளங்கோ யுடையரன் முனையதரையன்" (S.I.I. VI No 538 of 1909) என்னும் தஞ்சையைச் சேர்ந்த கோவிலூர்ச் சாசனத்து வருதலான், இக் குடி வழக்குண்மை உணரப்படும். திருநெல்வேலியைச் சார்ந்த கடையம் உள்ள நாடு கோயநாடு என வழங்கப்படும். கோநாடு எனச் சாசனங்களிற் பிழைபட எழுதப்பட்டுள்ளது கோநாடு என்பது வேறே இருத்தலான் இதன் பெயர் அங்ஙனமாகாமை எளிதினுணரலாம்.

இனி இக் கோசர் இயல்பில் முருடர் என்பதும் முற்காலத்துக் கள்ளை மிகவும் விரும்பி உண்டவர் என்பதும் தமிழ் நூல்களிற் கண்டனவேயாகும். இவற்றை

"இரும்பிடம் படுத்த வடுவுடை முகத்தர்" (அகம் 90)

எனவும்,

"நனைக் கள்ளின் மனைக் கோசர்" (புறம். 396)

எனவும் வருவனவற்றான் அறியலாகும். இவற்றொடு பொருந்தக் கௌசாம்பியரைப் பௌத்த நூல்கள் கூறிய இடங்களில் முருடர் எனவும் கள் விரும்புபவர் எனவும் குறித்தல் காணலாம். இவ் வுண்மை வம்ஸர்கள் (வத்ஸர்கள்) முருடர் கொடியார் அவருடைய அரசன் அழித்தலை மேற் கொண்டவன் "என்று கூறிய புத்தர் அவ்வத்ஸர் குடியில் அவதரிப்பது மறுத்தார்

எனவும் புத்த ஜாதக சரிதையில் ஸுராபான ஜாதகத்தில் புத்தர் கோசாம்பியர்க்குக் கள்ளருந்துதல் குற்றமென்றும் அதற்குக் கழுவாய் புரிய வேண்டுமென்றும் மொழிந்தனர், எனவும் வருதலான் அறியலாம்.

இனிக் கோசர் பிற்காலத்துப் பாண்டியர்கட்குக் கைக்கோட் சேனைபதிகள் என்னும் பெயருடையரா யிருக்

தது, "இப்படிச் சம்மதித்து விலைப்பிரமாணம் பண்ணிக் கொடுத்தோம் ஆதிசண்டேசுரதேவர்க்கு: திருநெல்வேலிக் **கைக்கோட் சேனாபதிகளோம்** இவை அதிசய பாண்டிய **வத்தராயன்** எழுத்து. இவை விக்கிரம பாண்டிய **வத்தராயன்** எழுத்து (S I.I Vol. V No 418)" என வருதலா னறியப்படுவது. ஈண்டுக் கைக்கோட் சேனை என்பது அரசற்குச் சார்தற் பொருட்டுச் சபதவிரதங் கொண்ட படையொன்று நினையலாம் கைக்கோள்-கோச சபதம், விரதம் என்று கொள்ளலாம் கைக்கோள்—தம ஒழுக்கமாகக் கைக்கொள்ளப் பட்டதொன்று. என்று. இவ்வாறே இவர் சோழர் கைக்கோட் படையாளராகவும் இருந்தனர் என்பதும் சாசனங்களாலறியப் படுவது. "திரிபுவன வீரதேவனை மெய்க்கீர்த்தியில் (புதுக்கோட்டைச் சாசனம் No. 163) "சாமரையும் **கோசராணையு**மேம் பரியும் கொடித்தேருங் குஞ்சரமும் வைகை நாடும்" சோழர் என்பதனுற் கொண்டாரெனத் தெரிதலால் சோழர் கோசரை ஆணையிடுவதைத் ஒரு பெருஞ் சிறப்பாகக் கருதினரென்பது புலனாகும் கோசம் என்பது கோசு எனவும் வழிபடுதல்" கோசுகுண்டு' எனவரும் பாண்டி நாட்டு ஊர்ப் பெயரா னறிந்தது.

ஸ்ரீ ராஜ ராஜ தேவர் கைக்கோட் படை பராந்தகன் தெரிந்த கைக்கோளரும், சுந்தர சோழர் தெரிஞ்சகைக் கோளரும், (S.I.I. Vol. IV No. 391), பாண்டிய குலாசனி தெரிஞ்சகைக் கோளரும், அபிமான பூஷண தெரிஞ்சகைக் கோளரும் (Epi. Report 1917 No 633) என்பனவற்றால் கைக்கோளர் ஏதோ ஒரு முறையிற் பேரரசராற் றெரிந்து படையிற் சேர்க்கப்படுவ ரென்பது தெரிஞ்சகைக் கோளர் என்னுந் தொடரால் அறியப்படும். இவருடைய சத்திய வீரத்திற் பேரரசர்க்குள்ள நம்புதலால் இவரைத் தம் அகப்பரிவாரத்து வைத்திருந்தன ரென்பதும்,

"நம்பிராட்டியார் நேரியன் மாதேவி
யகப் பரிவாரத்துக் கைக்கோளன் சோறு
டையானருக்கனை அன்பார புரணதிராயன்"

(S.I.I. Vol. V No. 700) என வருதலான் அறியக் கிடப்பது. இக்கைக்கோளச் சேனுபதிகட்கு விட்ட நிலங்கட்கு அரசர் உதிரப்பட்டி (ருதிர பத்ரிகா) என்ற ஒரு வீர சாசனம் கொடுப்பது வழக்கமென்பது பழைய கல்வெட்டுக்களால் அறியக் கிடப்பது. (Epi. Report 1917 No. 635). போரில் உதிரஞ் சிந்தும் வீரராதல் பற்றி இவ் வுதிரப்பட்டி கொடுக்கப்பட்ட தென்று நினையலாம். சாசனங்களில் இரண்டு கைமா சேனை, மூன்று கைமா சேனை என வழங்குதல் காணலாம். இரண்டு கை இடங்கை, வலங்கை யெனப் பகுக்கப்பட்ட சேனை வகை; நடுவிற் கையுங் கூட்டி இச் சேனை மூன்றுகையாகவும் கூறப்படும் என்று தெரியலாம். இதனுற் கை என்பது படை வகுப்பிற்குப் பெயராதலாலப் படைக்கைகளில் அமர்ந்த கோளர் என்று இவரைக் கொள்ளலாம். அங்ஙனங் கொள்ளின், கோசர் எனனுஞ் சொல்லே நாளடைவிற் கோளர் என மரீஇயின தென்று நினையலாம். கோசர் கோயர் என ஆகிப் பின் கோளர் என ஆயதெனக் கருதலாம் தூளி, தூசி என வருதலும் நினைக. திருக்கோளக்குடி எனபது கொடுங் குன்றத்துக்கு அணித்தாக மலையடியிலுள்ள ஊர். காளமேகம் பாட்டிலும் "கோள ரிருக்குமூா கோளக்களவு கற்றவூர்" என வருதல் காணலாம். கோள எனப் பின்னே வருதலாற்கோளர் குடிப் பெயரேயா மெனக. பதிற்றுப் பத்துரையுட் படையை அணியாகவும் வகுத்தல் கூறுவர்.

சங்க காலத்துக் கோசரும் வேளிரும் வட நாட்டின் வேறு வேறு பகுதியினின்று தென்னுட்டுப்புக்கவராதலால் இவ்விருவரும் தமக்குள் ஒற்றுமை யுடையராய் வாழ்ந்தனரென நினைதற்கில்லை. கோசர் ஒரு குழுவாக ஒரு புறத்தும் வேளிர் வேறு குழுவாக வேறொரு புறத்தும் ஒரு நாட்டே வதிந்தன ரென்று நினையத்தகும்.

"ஸ்ரீ கோவிராஜ கேசரி பன்மர்க்கு யாண்டு எட்டாவது அடிகள பழு வேட்டரையர் கண்டன் மறவனார்படை இளைய இரணமுக ராமனிற்கைக் கோளன் பல தேவன்

வயிரியைக் குன்றக கூற்றத்து மல்லூரிருக்கும் வெள்ளாளன் கிழவனம்பனும் பலதேவன் வைரியும் தங்களில் உருவிக் குத்திப் பலதேவன் வயிரிபடக கிழவனம்பனை அடிகள் பழுவேட்டரையன் கண்டன் மறவனார் சிறுபழுவூர்த் திருவாலந்துறையுடைய மஹாதேவர்க்கு இவனைச் சாத்தி ஒரு நுந்தா விளக்கு வையென்ன வைத்த சாவா மூவாப் பேராடு தொண்ணூறு" (Vol. V. No. 670) என வருதற்கண் வேளாளர்கும் கைக கோளர்கும் உள்ள பகைமை காணலாம்.

"திதியன் வேளி ரொடு பொரீஇய
கழித்தவாள் வாய்" எனவும
"ஞிமிலி வேண்மா னெயினற் கொன்று"

எனவும் வருமிடங்களால் இப்பகைமை சங்க காலந் தொட்டே உண்மை யுணரலாம்.

இனிக் கைககோட் படையாயும் கைககோட் சேனாபதிகளாயும் தமிழ மூவேந்தர்கரு அகப்பரி வாரத்துக காவற்றுணைவராயும போர்த்துணை வராயும் விளங்கிய இக கோசக குடி மககள தம படை வீரத்திற்கு இடனில்லாது போய காலத்து நூல் நூற்றுத் துகில நெய்யுந் தொழிலை நாளடைவின் மேற் கொண்டன ரென்று நினையத்தகும். இவ் வுண்மை "கைகக கோளப்படை" ( எனவும் "கைகக கோளர் தறி" (Epi. Report 1917 No. 310) எனவும் சாசனஙகளில் வழங்கலால் வலியுறுவது. திவாகர நிகண்டிலும் "செங்குந்தப் படையர் சேனைத் தலைவர், தந்து வாயர் காருகர் கைககோளர்" (மககட் பெயர்த் தொகுதி) என வருவதைக கொண்டு இவ் வுண்மை நன்குணரலாம்.